

# அம்ருதா
AMRUDHA

வேள்வி 14 கலசம் 159 அக்டோபர் 2019 ரூ. 25
Volume 14 Issue 159 October 2019 Rs.25
நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism



**டோனி மாரிசனுடன் ஓர் உரையாடல்**



**வெள்ளிக்கிழமை & வெள்ளிக்கிழமை விமர்சனம்**

அ. ராமசாமி
சிந்துஜா
ந. ஜயபாஸ்கரன்
பாவண்ணன்
மாலதி மைத்ரி
ஷங்கர்ராமசுப்ரமணியன்
இளங்கோ
அம்ருதா ப்ரீதம்
மாலன்
நடேசன்
டிசே தமிழன்
வண்ணநிலவன்
பொ. கருணாகரமூர்த்தி
டி. கண்ணன்

## கீழடி
# தமிழ்ப் பழைமையின் அறிவியல் ஆதாரங்கள்

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



Rs. 140



Rs. 130



Rs. 170



Rs. 110



Rs. 200



Rs. 100



Rs. 80



Rs. 90



Rs. 90

**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 73387 57878, 94440 70000,
**மின்னஞ்சல்:** info.amrudha@gmail. com, **இணையதளம்:** www. amruthamagazine. com

கேள்வி 14 கலசம் 159



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

அக்டோபர்-2019 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: சந்ரு
மனநலம்: டாக்டர் மா. திருநாவுக்கரசு
வரலாறு: பொ. வேல்சாமி
மொழிபெயர்ப்பு: நாகரத்தினம் கிருஷ்ணா
திரைப்படம்: விட்டல்ராவ்
கல்வி: பேரா. தியாகராஜன்
அறிவியல்: பத்ரி சேஷாத்ரி
இலக்கியம்: தேவேந்திரபூபதி
நாடகம்: அ. ராமசாமி
ஊடகம்: இளைய அப்துல்லாஹ்
சூழலியல்: மோகன்ராம்
இசை: ரவி சுப்பிரமணியம்
விளையாட்டு: ஆர். அபிலாஷ்
தற்கால நிகழ்வுகள்: செ. சண்முகசுந்தரம்
அரசியல்: மருதன்

வடிவமைப்பு: பிரபாகரன்

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


## இந்த இதழில்

# கீழடி ஆய்வு முடிவுகள்!

**பிரபு திலக்**

மதுரையிலிருந்து பன்னிரண்டு கி.மீ. தொலைவில், வைகை நதியின் தென்கரையில் அமைந்துள்ளது, கீழடி கிராமம். சுற்றிலும் தென்னந்தோப்புகள் சூழ்ந்து, அமைதியாக இருக்கும் இந்த கிராமத்தின் கீழே மண்ணுக்குள், ஒரு நகரம் புதைந்திருக்கிறது. அந்த நகரில் *2600* ஆண்டுகளுக்கு முன்னால் அரசாங்கம், தொழிற்சாலைகள், பல்வேறு வெளிநாடுகளுடன் வாணிபம், அதுசார்ந்த போக்குவரத்து, கடை வீதி, வீடுகள், விளையாட்டு என மக்கள் மிகவும் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருந்திருக்கிறார்கள். கீழடியில் கடந்த ஆறு ஆண்டுகளாக நடைபெற்றுவரும் அகழாய்வில், தோண்டத் தோண்ட வந்துகொண்டேயிருக்கிறது, அந்தக்கால மக்களின் எச்சங்கள்.

அக்கால மக்கள் வாழ்ந்த வீடுகள், பயன்படுத்திய வீட்டு உபயோகப் பொருட்கள், தானியங்கள் சேமித்து வைக்கும் மண்பானைகள்; கழுத்து, காதுகளில் அணியும் அணிகலன்கள்; தமிழ்-பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட உடைந்த மண்பாண்டங்கள்; சுட்ட செங்கற்கள், செங்கற்களைக் கொண்டு கட்டப்பட்ட சதுர வடிவக் கட்டிடப் பகுதிகள், சுடுமண்ணால் செய்யப்பட்ட உறைகிணறுகள், இரும்பு ஆயுதங்கள், பெரிய கூரை ஓடுகள், முத்து மணிகள், கண்ணாடி மற்றும் பலவகையான கல்மணிகள், சங்கு வளையல்கள், சுடுமண் பொம்மைகள், அம்மி, குழவி, செப்புப் பொருட்கள்; பளிங்கு, அகேட் மணிகள்; தந்தத்தால் செய்யப்பட்ட தாயக் கட்டைகள், சூது பவளத்தால் ஆன முத்துமணி மாலை, காதுகளில் அணியும் பளிங்கால் ஆன பாம்படம், கையில் அணியும் சித்திரம் வரையப்பட்ட சங்கு வளையல்; பச்சை, மஞ்சள், நீல நிறக் கண்ணாடி மணிகள்; மனித முக அமைப்புடைய பொம்மை, நந்தி உருவ பொம்மைகள், உருவமற்ற சுதைகள், தற்காப்புக்காகவும் வேட்டையாடவும் பயன்படுத்தப்பட்ட இரும்பாலான பலவகை ஈட்டி முனைகள், பெண்கள் விளையாடப் பயன்படுத்திய தந்தத்தால் ஆன தாயக்கட்டைகள் எனப் பல பொருட்கள் இந்த அகழாய்வில் கிடைத்துள்ளன. குறிப்பாக, ரோமானிய மட்பாண்டங்கள் உட்பட, அங்கு வாழ்ந்த மக்கள் உள்நாட்டின் பிற பகுதிகளோடு மட்டுமல்லாமல் வெளிநாடுகளோடும் வாணிபத் தொடர்பு வைத்திருந்ததற்கான தடயங்களும் சான்றுகளும் கிடைத்துள்ளன.

“தமிழ்நாட்டில் இதுவரை நடந்துள்ள அகழாய்வுகளில் முழுமையான குடியிருப்புப் பகுதி கிடைத்திருப்பது இதுதான் முதல்முறை. வரிசைகரமாக இருக்கும் வீடுகள், கனமான தட்டோடுகள் பதிக்கப்பட்ட தரைதளம், மேற்கூரைக்கு ஆணி அறையப்பட்ட செம்மண் ஓடுகள், வீடுகளை ஒட்டி பெரும் அகலத்தில் நீண்ட சுவர்கள், தண்ணீர் வழிந்தோட வடிகால்கள், உறையிடப்பட்ட கிணறு, பெண்கள் அணியும் அணிகலன்கள், இரும்பு ஆயுதங்கள், தாயக்கட்டை போன்ற விளையாட்டுப் பொருட்கள் போன்றவற்றைப் பார்க்கும்போது இங்கு வாழ்ந்தவர்கள் நாகரிகத்தில் மிக முன்னேறியிருந்ததும் தெரிய வருகிறது” என்று சொல்கிறார்கள் தொல்லியலாளர்கள்.

தமிழகத்தில் நடந்துள்ள தொல்லியல் ஆய்வுகள் தொடர்ந்து முடக்கப்பட்டும் அல்லது நிறுத்தப்பட்டும் வந்த சூழ்நிலையில், கீழடி ஆதி வேராக மாறி தமிழர்கள் பழம்பெருமையை உலகறியச் செய்துள்ளது.

இந்தியாவின் புகழ்பெற்ற வரலாற்றாளர்கள் பலரும் பழந்தமிழகத்தை ஒரு இனக்குழு சமூகமாகத்தான் வரையறுத்தார்கள். சிந்து சமவெளி நாகரிகத்தைப் போல ஒரு நகர நாகரிகம் இங்கு இல்லை என்பது அவர்கள் வாதம். இலக்கிய வர்ணனைகளைக் கடந்த ஆதாரங்கள் கண்டறியப்படாத நிலையில் இந்தக் கருத்துக்கு இதுவரை உயிர் இருந்தது. இப்போது கீழடி தரவுகள் அந்தக் கருத்தைத் தகர்த்திருக்கின்றன. பழங்கால தமிழர்களிடையே நகர நாகரிகம் செழிப்புற்று இருந்ததை கீழடி மெய்ப்பித்திருக்கிறது.

தமிழகத்தில் ஏற்கெனவே பல்வேறு அகழ்வாய்வுகள் நடத்தப்பட்டிருக்கின்றன. சோழர்களின் தலைநகரமாகவும் துறைமுகப் பட்டினமாகவும் கருதப்படுகிற பூம்புகார்; கொற்கை, ஆதிச்சநல்லூர்; மாங்குடிமருதனார் வாழ்ந்ததாகக் கருதப்படும் மாங்குடி; அதியமான் இருந்ததாகக் கருதப்படுகிற தகடூர்; கொடுமணல்; சேரர்களின் தலைநகராகக் கருதப்படும் முசிறிப் பட்டினம்; அரிக்கமேடு, உறையூர் உட்பட பல இடங்களில் அகழாய்வுகள் நடைபெற்றுள்ளன.

முதன்முதலில், ஆங்கிலேயர்கள் காலத்தில், இந்தியத் தொல்லியல் பரப்பாய்வுத் துறையை சேர்ந்த அலெக்சாண்டர் ரீ மேற்கொண்ட அகழாய்வுகள்தான் பழங்காலத்தில் மிகச் சிறந்த பண்பாட்டினை தமிழகம் கொண்டிருந்திருக்கிறது என்று வெளியுலகுக்குத் தெரியப்படுத்தின. அலெக்சாண்டர் ரீயின் முக்கிய

இரண்டு அகழாய்வுகள் ஆதிச்சநல்லூர், பெரும்பேர். இவரது ஆய்வில் ஆதிச்சநல்லூரில் கிடைத்த பொருட்கள் அனைத்தும் அங்குத் தொன்மையான நாகரிகம் ஒன்றிருந்ததை உறுதிப்படுத்தின. அவர் சேகரித்த வெண்கல பொருட்கள், சிந்துவெளி நாகரிகத்தில் கிடைத்த தாய் தெய்வ அமைப்புடைய வெண்கலத் திருவுருவம் போன்றவை. அது, 3000 ஆண்டுகளுக்கும் முன்பு சிறந்த வாணிக நகரமாக ஆதிச்சநல்லூர் இருந்திருக்க வேண்டும் என்கிற முடிவுக்கு அலெக்ஸாண்டர் ரீயை நகர்த்தின.

அதன்பிறகும் கொற்கை, காவிரிப்பூம்பட்டிணம், அரிக்கமேடு, உறையூர் ஆகிய இடங்களில் நடந்த அகழாய்வுகள் எல்லாவற்றின் முடிவுகளும்,தமிழர்களின் தொன்மையான நாகரிகத்தினை மீண்டும் மீண்டும் உறுதிப்படுத்துவதாகவே அமைந்தன. ஆனாலும், சமஸ்கிருதத்திற்கு பிறகுதான் தமிழ் தோன்றியது என்று காட்டுவதற்காக, கிமு 300க்கு முந்தைய காலத்திற்குத் தமிழர்களைக் கொண்டுசெல்ல மத்திய அரசு அனுமதிக்கவில்லை. மீறிச் சென்ற இடங்களில் அகழாய்வுகள் நிறுத்தப்பட்டன; அகழாய்வு முடிந்த இடங்களில் ஆய்வறிக்கைகள் முடக்கப்பட்டன.

1920ஆம் ஆண்டுதான் சிந்துசமவெளி ஆய்வுகளே நடக்கிறது. அதற்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே, 1876ஆம் ஆண்டே ஆதிச்சநல்லூரில் ஜெர்மானிய அறிஞர் ஜாகோர் ஆய்வுகள் மேற்கொண்டார். அவரைத் தொடர்ந்துதான் 1902ஆம் ஆண்டு அலெக்சாண்டர் ரியா ஆதிச்சநல்லூரில் அகழ்வாய்வு நடத்தினார். அப்போதும் ஏராளமான பொருட்கள் ஆதிச்சநல்லூரில் தோண்டி எடுக்கப்பட்டன. முதுமக்கள் தாழிகள், சமையலுக்குப் பயன்படுத்திய மண்பாண்டங்கள், இரும்பு படைக்கலங்கள், வாள், கத்திகள், கோடாரிகள், மனித எலும்புக்கூடுகள் உட்பட 50க்கு மேற்பட்ட பொருட்களை அலெக்சாண்டர் ரியா கண்டெடுத்தார்.

சுதந்திரத்துக்குப் பிறகு, நீண்ட வருடங்கள் இடைவெளிக்கும் போராட்டத்துக்கும் பின்னர், 2004ஆம் ஆண்டு பிப்ரவரி 4ஆம் தேதி தொடங்கி, இந்தியத் தொல்லியல் ஆராய்ச்சி கழக சென்னை சரக கண்காணிப்பாளர் சத்தியமூர்த்தி தலைமையில் ஆதிச்சநல்லூரில் மீண்டும் ஆராய்ச்சி நடைபெற்றது. 1902இல் ஆதிச்சநல்லூரில் கண்டெடுத்த பொருள்கள் பட்டியல் இடப்பட்டு, அதன் அறிக்கை நூலாக்கப்பட்டிருக்கிறது. ஆனால், 2004 ஆய்வில் என்னென்ன பொருட்கள் கண்டுபிடித்தார்கள் என்பது பற்றி எந்தவொரு தகவலும் வெளிவரவில்லை.

ஆதிச்சநல்லூர் போலவே பொருந்தல், கொடுமணல், அரிக்கமேடு, பூம்புகார் உள்ளிட்ட பல இடங்களில் நடந்த ஆய்வு அறிக்கைகளையும் மத்திய தொல்லியல்துறை முடக்கி வைத்துள்ளது. கீழடியிலும் முதல் இரண்டு கட்ட ஆய்வுகளில் சிறப்பாக பணியாற்றிய அமர்நாத் ராமகிருஷ்ணனை அஸ்ஸாமிற்கு மாற்றி, இந்த அகழாய்வை முடக்க முயற்சித்தார்கள். அதன்பிறகு போராட்டங்கள், நீதிமன்ற வழக்கு என பலகட்டங்கள் கடந்துதான் தமிழக தொல்லியல்துறை கீழடியில் அகழாய்வை மேற்கொண்டது.

கீழடியில் நடந்த நான்காம் கட்ட அகழ்வாய்வு குறித்து, தமிழக அரசின் தொல்லியல்துறை தற்போது வெளியிட்டுள்ள அறிக்கை, அங்குக் கிடைத்த தமிழ் பிராமி எழுத்துகளின் காலத்தை கிமு 6ஆம் நூற்றாண்டு என உறுதி செய்திருக்கிறது. ஆனால், தமிழ் எழுத்தின் தொன்மை 2600 ஆண்டுகள் அல்ல, அதையும் தாண்டி 3500 ஆண்டுகள் வரை ஏற்கனவே முன் சென்றுவிட்டது குறிப்பிடத்தக்கது.

மதுரை அருகே கண்டுபிடிக்கப்பட்ட புள்ளிமான் கோம்பை நடுகல் தமிழி எழுத்துக்கள், அசோகர் காலத்துக்கும் முன்பானது என அறிஞர்கள் கூறியுள்ளனர். பொருந்தல் அகழ்வாய்வில் கிடைத்த நெல்லின் காலம் கி.மு. 490 என அறிவியல் முறைப்படி உறுதிப்படுத்தப் பட்டிருக்கிறது. இலங்கையில் உள்ள அனுராதபுரத்தில் கிடைத்த வரிவடிவம் கி.மு. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்றும், கொற்கையில் கிடைத்த வரி வடிவம் கி.மு. 785 என்றும் கண்டறிந்திருக்கிறார்கள். சமீபத்தில் வெளியான புளோரிடா ஆய்வறிக்கையில் ஆதிச்சநல்லூர் கிமு 1000 ஆண்டுக்கு முந்தையது என்று உறுதியாகி இருக்கிறது.

மயிலாடுதுறை அருகிலுள்ள செம்பியன் கண்டியூரில் கண்டெடுக்கப்பட்ட இரண்டு கற்கோடாரிகளில் ஒன்றில் நான்கு குறியீடுகள் காணப்பட்டன. இதில் இரண்டு குறியீடுகளைச் சேர்த்து, ‘முருகன்’ என்ற சொல்லை உணர்த்துவதாக ஐராவதம் மகாதேவன் கூறியிருக்கிறார். அந்தக் கல் ஆயுதங்கள் 3500 ஆண்டுகளுக்கு முற்பட்டதாக இருக்க சாத்தியம் உண்டு என்று ஆய்வு முடிவுகள் தெரிவித்துள்ளன.

பூம்புகாரில் கடலுக்குள் மூழ்கிய நிலையில் மிகப்பெரிய நகரம் இருப்பதாகவும் அந்நகரம் 11 ஆயிரம் ஆண்டுகள் பழமைகொண்டது என்றும், இங்கு ஆய்வை மேற்கொண்ட கிரகாம் ஆன்காக் அறிவித்துள்ளார். அவருடைய கருத்தை டர்காம் பல்கலைக்கழகப் பேராசிரியர் கிளன் மில்னே உறுதி செய்துள்ளார்.

எனவே, கீழடியைத் தொடர்ந்து, ஆதிச்சநல்லூர், சிவகளை, கொற்கை உள்ளிட்ட பொருநை நாகரீக பகுதிகளிலும், காவிரி நாகரீக பகுதிகளிலும் தொடர்ச்சியான ஆய்வுகளைத் தமிழக தொல்லியல் துறை மேற்கொண்டால் தமிழர்களின் பழங்கால நகர நாகரீகம் இன்னும் பல நூற்றாண்டுகள் முன்னே செல்லும். ஆதிச்சநல்லூரில் 114 ஏக்கர் உள்ள பரம்பில் 1 ஏக்கர் மட்டுமே ஆய்வு நடந்துள்ளது. மீதி இடத்தில் ஆய்வு நடைபெறவில்லை. அலெக்ஸாண்டர் ரியா, இந்த பகுதியில் 36 இடங்களில் ஆய்வு செய்யவேண்டும் என்று அறிவித்துள்ளார்.

ஆதிச்சநல்லூர் அகழாய்வில் இரும்பு கிடைத்துள்ளது. ஆனால், சிந்துவெளி நாகரீகத்தில் இரும்பு கிடைக்கவில்லை. ஆதிச்சநல்லூர் இரும்பை மத்திய அரசு ஒப்புக்கொண்டால் இரும்புக் காலம் பற்றிய வரலாறு, அதன் காலகட்டம் அனைத்தும் மாறும் என்பது குறிப்பிடத்தக்கது. ●

## கீழடிச் சான்றுகள்

# தமிழ்ப் பழைமையின் அறிவியல் ஆதாரங்கள்

அ. ராமசாமி

நவீன மனிதனாக வாழ்ந்துகொண்டே பழைமையின் மீதான பற்றும் இருப்பதாகப் பாவனை செய்வது மனித இயல்பு. தனிமனிதர்களுக்குள்ள இந்த இயல்பு குழுவாகவும் கூட்டமாகவும் அடையாளப்படுத்தப்படும் போதும் வெளிப்படுகிறது. என் தாத்தா 100 வயதைத் தாண்டியவர் என்பதைச் சொல்லும்போது இருக்கும் பெருமிதத்தின் தொடர்ச்சிகளே ஊரின் பழைமை, மொழியின் பழைமை, இனத்தின் பழைமை என நீள்கிறது. அண்மையில் வெளியிடப்பெற்ற கீழடித் தொல் ஆதாரங்கள் தமிழர்கள் கொண்டிருக்கும் பழைமை குறித்த பெருமிதங்களில் உண்மை இருக்கிறது என்பதை அறிவியல் முறைப்படி அறிவிக்க உதவியிருக்கிறது.



எந்தப் பலத்தின் ஆய்வு முடிவுகளும் தேடலின் விளைவுகளே. மனிதர்கள் தாங்கள் இருக்கும் பிரபஞ்சத்தை நிரப்பி யிருக்கும் நிலம், நீர், நெருப்பு, காற்று, விசும்பு என்னும் ஐந்து மூலங்களையும் பயன்படுத்திக் கொண்டேயிருக்கிறார்கள். அதற்காக அவற்றின் தோற்றம் மற்றும் இருப்பு நிலைகளை அறிய முயல்கிறார்கள். அவையே இப்போது அறிவியல் ஆய்வுகளாக அறியப்படுகிறது. இயற்கை மூலங்களை அறிய முயன்றது போல மனிதர்களின் தோற்றம் மற்றும் இருப்பு நிலைகளையும்கூட அறிந்து அறிவியல் சில முடிவுகளைச் சொல்லியிருக்கிறது.

தொடர்ச்சியாக மனிதர்களைப் பற்றி ஆய்வு செய்யும் மானிடவியல் என்னும் அறிவுத் துறைக்குள் உடற்கூறு மானிடவியல் (Physical Anthropology), சமூக மானிடவியல் (Social Anthropology), பண்பாட்டு மானிடவியல் (Cultural Anthropology) என்று மூன்று பிரிவுகள் உண்டு. உடற்கூறு மானிடவியலுக்கான சான்றுகளைத் தேடித்தரும் வேலையைச் செய்வது தொல்லியல். தொல்லியல் ஆதாரங்களே வரலாறு எழுதுவதற்குக்காண அடிப்படை ஆதாரங்களாகவும் இருக்கின்றன. பனிப்பிரதேசங்களிலும் குகைகளுக் குள்ளும் புதையுண்ட தாழிகளுக்குள்ளும் கிடைத்த மனித உயிரிகளின் உடல் நிறம், முக அமைப்பு, ரோமங்களின் தன்மை போன்றவற்றின் அடிப்படையில் மூன்றுவிதமான இனங்களாகப் பிரிக்கிறது உடற்கூற்று மானிடவியல். நீக்ரோவியர்கள், மங்கோலியர்கள், காகேசியர்கள் என்பன அந்த இனங்கள்.

இந்தியத் துணைக்கண்டத்தில் இம்மூவகை இனத்தில் இருவகை இனத்தைச் சேர்ந்தவர்கள் இப்போது இருக்கிறார்கள். காகேசிய இனத்திற்குள் அடங்கும் இந்தோ - ஆரியர்களும் வட இந்தியாவில் கூட்டமாக இருக்கிறார்கள். தென்னிந்தியாவில் வாழும் திராவிடர்கள் நீக்ரோவியக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். இவ்விரு இனத்தைச் சேர்ந்தவர்களில் யார் இந்தியாவின் பூர்வகுடி என்பது குறித்தும், யார் வந்தேறிகள் என்பது குறித்தும் முரண்களும் மோதல்களும் இருக்கின்றன. இந்தப் பின்னணி யில்தான் கீழடியில் கிடைக்கும் சான்றுகளுக்கு அறிவியல் ஆய்வகம் தந்த அறிக்கை தமிழர்களுக்கு மகிழ்ச்சியை அளித்துள்ளது.

உலகெங்கும் நகர நாகரிகங்கள் நதிக்கரைகளில் தோன்றி வளர்ந்தன. இந்தியாவிலும் நகர நாகரிகங்கள் நதிக்கரைகளில் தோன்றியுள்ளன என்பதை தொல்லியல் ஆய்வுகள் உறுதிசெய்துள்ளன. வட இந்தியாவில் சிந்து நதிக்கரையிலும் கங்கைக்கரையிலும் நகரங்கள் இருந்தன. இவற்றுள் சிந்து நதிக்கரை நாகரிகமே, ஹரப்பா நகர நகரம் என உறுதி செய்யப்பட்டது. அதன் காலம் பொதுக்கணக்காண்டுப்படி 4000 (கி.மு. 2000 - 1900) ஆண்டுகள் பழைமையானது என ஏற்றுக்கொள்ளப்பட்டது. கங்கைக் கரையிலும்

பாடலிபுத்திரா போன்ற நகரங்கள் இருந்தன என ஏற்றுக்கொள்ளப்பட்டது. தென்னிந்தியாவிலும் நதிக்கரை நாகரிகங்கள் இருந்தன என்பது தொல்லியல் துறையினரால் ஏற்றுக் கொள்ளப்பட்டாலும் பொதுக் கணக்காண்டுப்படி *2200* ஆண்டுக்கு முன்பு இருந்ததில்லை என்று தொல்லியலாளர்கள் சொல்லி வந்தனர்.

இதையெல்லாம் மறுத்துப்பேசுவதற்கு ஏராளமான இலக்கியச் சான்றுகள் தமிழில் உண்டு. ஆனால் தொல்லியல் சான்றுகள் இல்லாமல் இருந்தன. அதனைத் தோண்டி எடுத்துக்காட்டுவதற்காகப் பல இடங்களில் தொல்லியல் ஆய்வுகள் செய்யப்பட்டுள்ளன. இதுவரை தமிழ்நாட்டில் *40* இடங்களில் அகழாய்வுகள் நடந்துள்ளன. அவைகளும் நதிக்கரையோரங்களிலேயே நடந்தன. தாமிரபரணிக்கரையில் செய்யப்பட்ட ஆதிச்சநல்லூர் அகழாய்வு முக்கியமான ஒன்று. அதேபோல புதுச்சேரிக்கும் கடலூருக்கும் இடையில் இருக்கும் அரிக்கமேட்டு அகழ்வாய்வும் முன்னர் செய்யப்பட்ட ஆய்வாகும்.



சுடுமண் உருவம்

காவிரி நதியின் முகத்துவாரத்திலிருந்த பூம்புகார் நகரம் கடலுக்குள் புதையுண்ட நகரமாக இருக்கிறது. அதன் அமைப்பைக் கண்டுபிடிக்கவும், அந்நகரத்தில் இருந்த பொருட்களின் பழைமையை ஆய்வுக்குட்படுத்தவும் செய்த முயற்சிகள் முழுமையாக சாத்தியமாகவில்லை. அதன் பிறகு தர்மபுரிக்கருகில் கொடுமணலில் அகழாய்வுகள் செய்யப்பட்டுத் தொல்லியல் சான்றுகள் எடுக்கப்பட்டுச் சோதனைச்

சாலைகளுக்கு அனுப்பப்பட்டன. கொடுமணல், அழகன் குளம், பொருந்தல் போன்ற இடங்களில் கிடைத்த சான்றுகளின் காலம் 2500 ஆண்டுப்பழைமை என முன் வைக்கப்பட்டது என்றாலும் அதன் மீது சர்ச்சைகளும் இருந்துகொண்டே இருந்தன. அத்தோடு ஹரப்பாவைப்போல, பாடலிபுத்திராவைப் போலத் தென்னிந்தியாவில் நகரங்கள் இருந்ததில்லை; இங்கிருந்ததெல்லாம் வேளாண் நாகரிகமே தவிர வணிகத்தையும் தொழிற்சாலைகளையும் கொண்ட நகர நாகரிகம் அல்ல என்பதும் வாதங்களாக இருந்தன. அத்தோடு நிர்வாக முறை தெரிந்த அரசு உருவாகவில்லை என்றும் எழுத்தும் கல்வியும்கூட இருந்திருக்க வாய்ப்பில்லை என்பதாகவும் சொல்லப் பட்டது. தமிழ்நாட்டு அகழாய்வுகளில் கிடைக்கும் பொருட்கள் மீது எழுதப்பட்டிருக்கும் எழுத்து வடிவம் பிராமி எழுத்துகள் எனவும், தமிழுக்கும் அதற்கும் தொடர்பில்லை என்றும் வாதங்கள் உண்டு. அதனை மறுப்பவர்கள் இவை தமிழ் - பிராமி வடிவங்கள் என்றும் சொல்லிவந்தனர்.

இந்நிலையில்தான் வைகை நதிக்கரையிலிருந்த நகர நாகரிகத்தை வெளிக்கொண்டுவரும் தொல்லியல் ஆய்வுக்குத் திட்டமிடப்பட்டது தமிழக அரசின் தொல்லியல் துறை. அதற்காகத் தேர்வு செய்யப்பட்ட இடமே கீழடி. அந்த இடத்தில் பழைய நகரம் இருந்தது என்பதைத் தரை ஊடுருவல் தொலை உணர்வு மதிப்பீடுகள் உறுதிசெய்துகொண்டே அகழாய்வு மேற்கொள்ளப்பட்டது. மும்பையிலுள்ள இந்திய புவிகாந்தவியல் நிறுவனம், அண்ணா பல்கலைக்கழகத்தின் தொலை உணர்வு நிறுவனம் மற்றும் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் தொலை உணர்வு துறை போன்ற புகழ் பெற்ற நிறுவனங்கள் இதற்குத் துணைசெய்துள்ளன..

தமிழ்நாட்டரசின் தொல்லியல் ஆய்வுத்துறை மதுரையிலிருந்து கிழக்கே 13 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கும் கீழடி என்னும் கிராமப்பகுதியை அகழ்வாய்க்கான பகுதியாகத் தேர்வு செய்து 2016இல் பணியைத் தொடங்கியது. அதில் ஒவ்வொரு கட்ட ஆய்விலும் கிடைத்த ஆய்வுகளை முறைப்படியான அறிவியல் சோதனைகளுக்கு அனுப்பி வந்தது. அண்மையில் (செப்டம்பர் 19) அன்று நான்காம் கட்ட ஆய்வு முடிவுகளை முறைப்படி அறிவித்துள்ளது.

> *கீழடியில் 2018ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்ட நான்காம் கட்ட அகழாய்வின் போது சேகரிக்கப்பட்ட ஆறு கரிம மாதிரிகள், அமெரிக்க நாட்டின் புளோரிடா மாகாணம், மியாமி நகரத்தில் அமைந்துள்ள பீட்டா பகுப்பாய்வு சோதனை ஆய்வகத்திற்கு* (Beta Analytic Testing Laboratory) *அனுப்பப்பட்டன. பகுப்பாய்விற்கு அனுப்பப்பட்ட மாதிரிகளில் அதிகபட்சமாக 353 செ.மீ. ஆழத்தில் கிடைக்கப் பெற்ற கரிமத்தின் காலம் கி.மு. 580 என்று கணக்கீடு செய்யப்பட்ட ஆய்வறிக்கை கிடைக்கப் பெற்றுள்ளது. இக்காலக் கணிப்பின்படி, கி.மு. 6ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 1ஆம் நூற்றாண்டு வரை வளமையான பண்பாடு கொண்ட பகுதியாக கீழடி விளங்கியிருக்க வேண்டும் எனத் தெரிகிறது*



விளையாட்டிற்கான ஆட்டக்காய்கள்

என்பது அறிக்கையில் இருக்கும் முன்வைப்பு.

அந்த ஆய்வில் கிடைத்த பொருட்கள் நகரக் கட்டமைப்பையும் வேளாண் நாகரிகத்தையும் வணிகச் செயல்பாடுகளையும் தொழில்நுட்ப அறிவையும் முன்வைக்கின்றன. தொல்லியல் துறையின் அறிக்கை தரும் முக்கியமான கண்டுபிடிப்புகளைக் கீழே காணலாம்

> *கீழடி அகழாய்வில் செங்கற்கள், சுண்ணாம்புச் சாந்து, கூரை ஓடுகள் மற்றும் சுடுமண்ணாலான உறைக்கிணற்றின் பூச்சு ஆகியன கிடைத்துள்ளன. இவை ஒவ்வொன்றிலும் சிலிக்கா மண், சுண்ணாம்பு, இரும்பு, அலுமினியம், மற்றும் மெக்னீசியம் போன்ற கனிமங்கள் காணக்கிடைக்கின்றன. அவற்றின் கலவை மற்றும் தன்மை குறித்து விரிவான அறிக்கை பெறப்பட்டுள்ளது.*
>
> *இவைதவிர விலங்குகளின் எலும்புத்துண்டுகள் கிடைத்துள்ளன. திமிலுள்ள காளை, எருமை, வெள்ளாடு, கலைமான், காட்டுப்பன்றி மற்றும் மயில் ஆகிய உயிரினங்களுக்குரியவை என்று அடையாளம் காணப்பட்டுள்ளன. இவற்றில் திமிலுள்ள காளை, பசு, எருமை, வெள்ளாடு ஆகிய விலங்கினங்கள் 53 சதவீதம் இடம்பெற்றுள்ளன. எனவே, இவ்விலங்கினங்கள் வேளாண்மைக்கு உறுதுணைசெய்யும் வகையில் கால்நடைகளாக வளர்க்கப்பட்டுள்ளன எனக் கருதலாம். கலைமான், வெள்ளாடு, காட்டுப்பன்றி போன்ற விலங்குகளின் சில எலும்பு மாதிரிகளில் வெட்டுத் தழும்புகள் காணப்படுகின்றன என்று ஆய்வில் குறிப்பிட்டுள்ளதால், இவ்விலங்கினங்களை அக்கால மனிதர்கள் உணவிற்காகப் பயன்படுத்தியுள்ளனர் என்பது தெரிய வருகிறது. இப்பகுப்பாய்வு முடிவுகள் மூலம் சங்க காலச் சமூகம், வேளாண்மையை முதன்மைத்தொழிலாகக்கொண்டிருந்ததோடு, கால்நடை வளர்ப்பையும் மேற்கொண்டிருந்தது என்பது தெளிவாகிறது.*
>
> *தமிழ்நாட்டைப் பொறுத்தவரை குறியீடுகளுக்கு அடுத்து காணக் கிடைக்கின்ற வரிவடிவம் தமிழ்-பிராமி எழுத்துவடிவமாகும்.*




தமிழ் - பிராமி எழுத்துகள் உள்ள பானை ஓடுகள்

*இவ்வெழுத்தை தமிழி என்றும் பண்டைத் தமிழ் எழுத்துகள் என்றும் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். தமிழகத்தில் வரலாற்றுத் தொடக்கக்காலத்தைச் சார்ந்த இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகளில் தமிழி (தமிழ் - பிராமி) எழுத்துப் பொறிப்பு பானை ஓடுகள் கிடைக்கப்பெற்றுள்ளன. தமிழி எழுத்துகள் பொறிக்கப்பட்ட மோதிரங்கள் முந்தைய அகழாய்வுகளில் கண்டெடுக்கப்பட்டன. தமிழகத்தில் 32க்கும் மேற்பட்ட ஊர்களில் சங்ககாலத்தைச் சார்ந்த தமிழ் - பிராமி எழுத்துப்பொறிக்கப்பட்ட 110 கல்வெட்டுகள் கண்டறியப்பட்டுள்ளன. இவை பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் அவர்களால் படித்தறியப்பட்டு நூலாக வெளியிடப்பட்டுள்ளன. கீழடி அகழாய்வில் தமிழ் (தமிழ் - பிராமி) எழுத்துப்பொறிக்கப்பட்ட 56 பானை ஓடுகள் தமிழ்நாடு அரசு, தொல்லியல் துறை மேற்கொண்ட அகழாய்வில் மட்டும் சேகரிக்கப்பட்டுள்ளன.*

*கீழடி அகழாய்வில் வெளிக்கொணரப்பட்ட தொல்பொருட்கள் இதுவரை தமிழக வரலாற்றில் கடைபிடிக்கப்பட்டு வந்த கருதுகோள்களைச் சீர்தூக்கி பார்க்க வேண்டிய அல்லது மறுபரிசீலனை செய்ய வேண்டிய சூழலை ஏற்படுத்தி உள்ளன என்றால் மிகையாகாது.*

*பொதுவாக 'சங்க காலம்' என்பது கி.மு. மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு என்று கருதப்பட்டு வந்தது. ஆனால், கீழடியில் கிடைத்த காலக்கணிப்புகள் தமிழகத்தின் எழுத்தறிவை கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்கு எடுத்து செல்வதால் சங்ககாலத்தின் காலவரையறையை மீளாய்வுக்கு உட்படுத்த வேண்டியுள்ளது. கொடுமணல், பொருந்தல் ஆகிய இடங்களில் கிடைத்த தமிழ் பிராமி எழுத்துப் பொறிப்பு பெற்ற மட்பாண்டங்களின் காலம் கி.மு. 5ஆம் நூற்றாண்டுவரை பின்நோக்கி தள்ளப்பட்டன. ஆனால், கீழடியில் கிடைத்த அறிவியல் சார்ந்த கால கணிப்புகள் இதன் காலத்தை மேலும் ஒரு நூற்றாண்டு பின் நோக்கி தள்ளி கி.மு. ஆறாம் நூற்றாண்டில் நிலை நிறுத்தியுள்ளதே கீழடி ஆய்வுகளின் சிறப்பு அம்சமாகும்.*

*இந்தியாவில் கங்கை சமவெளி பகுதியில் கி.மு. ஆறாம் நூற்றாண்டளவில் தோன்றிய இரண்டாம் நகரமயமாக்கம் தமிழகத்தில் காணப்படவில்லை என்ற கருதுகோள் இதுவரை அறிஞர்களிடையே நிலவிவந்தது. ஆனால், கீழடி அகழாய்வு கி.மு. ஆறாம் நூற்றாண்டளவில் தமிழகத்தில் நகரமயமாக்கம் உருவாகிவிட்டதை நமக்கு உணர்த்துகிறது.*

அறிக்கையை அளித்துள்ள தொல்லியல் துறை இவை அனைத்தையும் சங்க காலம் என்னும் கற்பிதமான காலப்பகுப்போடு இணைத்துக் கூறியுள்ளது. இப்போது அறிவியல் ஆய்வகத்தின் வழி கீழடி என்னும் இடத்தில் கிடைத்துள்ள தரவுகள் 2600 ஆண்டுகளுக்கு முன்பே திட்டமிட்ட கட்டட அமைப்பும், நகர அமைப்பும், வாழ்க்கைக்கான வசதிகளும் கொண்ட நகரம் ஒன்று இருந்தது என்பதற்கான ஆதாரங்கள். அங்கு வாழ்ந்தவர்கள் மண்பாண்டங்களில் எழுதினார்கள்; விலங்குகள், பறவைகள் போன்றவற்றை வரிவடிவங்களாகத் தீட்டினார்கள் என்பதோடு உலோகங்களால் செய்த கருவிகள் பயன்பாட்டிலிருந்தன. தங்கத்தில் நுட்பமான வேலைப்பாடுகள் கொண்ட நகைகள் செய்தார்கள். அவை விற்பனைப் பண்டங்களாக இருந்தன. தங்களுக்குள் தொடர்புகளைச் செய்ய எழுத்துப் பயன்பாட்டைக் கொண்டிருந்தார்கள் என்று விவரிப்பதற்கான பருண்மையான ஆதாரங்கள்.

இந்த ஆதாரங்கள் கிடைத்துவிட்டதால் மட்டுமே வைகைக் கரை நாகரிகம் 2600 ஆண்டுகள் பழைமையானது என்பதல்ல. அதற்கும் சில ஆயிரங்களுக்கு முன்பே தோன்றி வளர்ந்த நாகரிகம். ஏனென்றால், கீழடிச் சான்றுகள் வழி உறுதியாகியுள்ள தகவல்களைத் தமிழின் தொல்லிலக்கியங்களான பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் ஏற்கெனவே தந்துள்ளன. மதுரை நகரத்தின் தெருக்களின் அமைப்பையும் மக்களின் நகர வாழ்க்கை பற்றிய தகவல்களையும் மாங்குடி மருதன் எழுதிய 'மதுரைக்காஞ்சி'யும், நக்கீரர் எழுதிய 'நெடுநல்வாடை'யும் விரிவாகச் சொல்கின்றன. இவை இரண்டும் 'பத்துப்பாட்டு' என்னும் நெடும் பாடல் தொகுப்பில் இருக்கும் நூல்கள். இன்னொரு தொகையான எட்டுத்தொகையில் இருக்கும் பரிபாடலில் மதுரையை உரசிக்கொண்டு ஓடும் வைகை பற்றிய பாடல்கள் அதிகம் இருக்கின்றன.

இன்னொரு கடல் நகரமான காவிரிப்பூம்பட்டினத்து வாழ்க்கையைப் பட்டினப்பாலை விவரித்திருக்கிறது. அந்நகரம் வணிக நகரமாகவும் துறைமுக நகரமாகவும் இருந்துள்ளது. அதனைச் சுற்றி வேளாண்மை செழுத்து வளர்ந்ததையும் விரிவாகப் பேசியுள்ளது. இவையெல்லாம் நகர அமைப்பு, அரண்மனை அமைப்பு, வீடமைப்பு பற்றிய தகவல்களைப் பேசும் - நகரவாழ்க்கையின் பதிவுகளைத் தரும் நூல்.இவற்றிற்கிணையாகக் கிராமப் புறங்களையும் மலைப்பாதைகளின் பயணங்களையும் ஆற்றுப்படைகள் விவரித்திருக்கின்றன. 99 பூக்களை வரிசைப்படுத்தும் குறிஞ்சிப்பாட்டு வன அறிவைக் கொண்டிருந்ததையும் மலைவளத்தைப் பயன்படுத்திக்கொண்டதையும் தருகின்றது.

நெடும்பாடல்களுக்கு முன்னால் எட்டுத் தொகை




வீட்டு உபயோகப் பொருள்கள்




ஏழு பொன்னாபரணங்கள்

யிலிருக்கும் குறும்பாடல்கள் எழுதப்பட்டிருக்கின்றன. அவை எழுதப்பெற்ற காலம் சில ஆயிரங்களுக்கு முன்பு. அவற்றிற்கும் முன்னால் வாய்மொழித்தன்மை கொண்ட ஐங்குறுநூற்றுப் பாடல்கள் கிடைத்திருக்கின்றன. அதில் முல்லைப் பாடல்களை எழுதிய ஓரம்போகியார் ‘வாழி ஆதன் வாழி அவினி’ எனத் திரும்பத் திரும்பச் சொல்கிறது. இந்தப் பெயர்கள் கீழடியிலும் கிடைக்கும் பெயர்கள். ஐங்குறுநூற்றின் மொழியமைப்புக்கும் அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை, பரிபாடல் போன்றவற்றின் மொழிநடைக்கும் வேறுபாடுகள் இருக்கின்றன. வாய்மொழிப் பாடல்களில் இறுக்கம் ஏற்படச் சில நூற்றாண்டுகள் அல்லது சில ஆயிரம் ஆண்டுகள் ஆகும் என்பது இலக்கிய வரலாறு சொல்லும் செய்தி.

இலக்கியங்கள் தரும் தகவல்களைப் போலப் பன்மடங்கு செய்திகளையும் தமிழர்களின் இயற்கை அறிவியல் பார்வையையும் மொழிபற்றிய கோட்பாட்டையும் நூலாக்கம், சமூக அமைப்பு குறித்த கருத்துகளையும் தொல்காப்பியப் பனுவல் குறிப்பிடுகின்றது. உயிரினங்களின் தோற்றவியல் பற்றிப் பேசுகிறது. உயிர்களுக்குப் பெயரிடுதல் பற்றிப் பேசுகிறது. அறிவுத்தோற்றம், குடும்பம், அரசு, கோட்டை, காப்பரண் போன்றவற்றை உருவாக்குதல் பற்றியெல்லாம் அது விரிவாகப் பேசியுள்ளது. ஐரோப்பியச் சிந்தனை மரபுக்கு ஆதாரமாக இருக்கும் அரிஸ்டாடிலின் பனுவலையொத்த பனுவலாக இருக்கிறது தொல்காப்பியப் பனுவல்.

இவையெல்லாம் இருந்தாலும் இவற்றின் - எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, தொல்காப்பியம் உள்ளிட்ட தமிழ்த் தொல்நூல்களின் - காலத்தை அறிவியல் பூர்வமாக உறுதிசெய்ய முடியவில்லை. இப்போது கீழடியில் கிடைத்துள்ள தொல்லியல் ஆய்வுகள் வழி உறுதி செய்யப்பட்டுள்ள உண்மைகள், இலக்கியங்கள் பேசும் உண்மைகளை உறுதி செய்கின்றன என்பதில்தான் நாம் மகிழும் காரணங்கள் இருக்கின்றன.

மகிழ்ச்சியோடு, கீழடிச் சான்றுகளை முன்வைக்கும் போது சங்ககாலச் சான்றுகள் எனச் சொல்வதைத் தவிர்க்கவேண்டும் என நினைக்கிறேன். ஒய். சுப்பராயலு போன்ற முன்னோடித் தொல்லியல் ஆய்வாளர்கள் அதனை ஏற்கமாட்டார்கள். கிடைத்துள்ள ஆதாரங்கள் ஒரு பழைய நாகரித்தின் ஆதாரங்கள் என்பதும், வைகை நதிக்கரையில் இப்போதும் இருக்கும் பழம்பெருமை மிக்க மதுரையின் ஒருபகுதியையே கீழடி அகழாய்வு வெளிக்கொண்டு வந்திருக்கிறது என்பதும் உண்மையாக மாறலாம். அதன்மூலம் இந்தியத் துணைக்கண்டத்தில் சிந்துவெளியிலும் கங்கைக்கரையிலும் நகரங்கள் உருவாகி வளர்ந்ததற்கிணையாக நகரங்கள் இருந்தன; துறைமுகங்கள் இருந்தன; வணிகம் வளர்ந்திருந்தது என்பதை உறுதிசெய்யலாம். அதற்குத் தொல்லியல் ஆதாரங்களோடு சமநிலையில் இலக்கியச்சான்றுகளையும் பொருந்தச்செய்ய வேண்டும்.

இந்த இடத்தில் சங்க காலம் என்ற சொல்லாடலை வரலாற்றாய்வில் தவிர்க்கவேண்டும் என்று எச்சரிக்கையும் சொல்ல விரும்புகிறேன். ஏனென்றால், சங்கங்கள் பற்றிய செய்தியைத் தரும் இறையனார் களவியல் உரை காலத்தால் பிந்தியது. இறையனார் களவியல், தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் அடிப்படையைப் புரிந்துகொள்ளாமல் அகப்பொருள் இலக்கணம் சொன்ன நூல். திருவிளையாடற்புராணக் கதைகளை உள்வாங்கிச் செய்யப்பெற்ற இறையனார் களவியலே, முச்சங்கம், இறையனார் அமர்ந்து தமிழாய்ந்தது போன்றனவற்றைச் சொல்லிப் புராணிகத் தன்மையைப் புகுத்தியுள்ளது. அதனை ஏற்றுக்கொண்டு, கீழடித் தரவுகளைச் சங்க காலச் சமூகத்தின் தரவுகளாக நிறுவும் முயற்சிகள், கிடைத்த அறிவியல் ஆதாரங்களையும் புராணிகத்தன்மை கொண்டவையாக மாற்றிவிடும். கீழடிச் சான்றுகளைச் சங்கம் என்ற சொல்லோடு இணைக்காமல் பேசுவதே சரியானது என்பதே நான் சொல்ல விரும்பும் எச்சரிக்கை.

மொழி, இலக்கிய ஆய்வியலில் காத்திரமான பங்களிப்புச் செய்த பலரும் சங்ககாலம் என்பதை ஏற்றுப் பேசுவதில்லை. சான்றோர் இலக்கியங்கள், வீரநிலைக்காலம், வீரநிலைக்கவிதைகள், செவ்வியல் கவிதைகள், செவ்வியல் இலக்கியக்காலம் போன்றவற்றையே அவர்கள் பயன்படுத்துகிறார்கள். இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு காத்திரமான ஆய்வுகளைச் செய்த க. கைலாசபதி (தமிழ் வீரயுகக் காலம்), கா. சிவத்தம்பி (பல ஆய்வுக்கட்டுரைகள்), கோ. கேசவன் (மண்ணும் மனித உறவுகளும்) போன்றவர்களின் ஆய்வுகளை வாசித்தவர்கள் இதனை ஏற்பார்கள். ●

**“அ. ராமசாமி” <ramasamytamil@gmail.com>**

கவிதை

# ந. ஜயபாஸ்கரன் கவிதைகள்



1.

நான் மட்டும் கரமைதுனம் செய்து கொண்டிருந்த கடைவெளியில்
மற்றவர்கள் எப்படி நுழைந்தார்கள்
கடைவீதியிலிருந்து மறைந்து கொண்டிருக்கும் சாம்பிராணி சாய்புவின்
செவ்வாய் வெள்ளி சாம்பிராணிப் புகையாய்?
மாற்றம் மறுக்கும்
தனிமை காக்கும்
மடச்சாம்பிராணியாய்த் தான்
நான் பெரிதும் இருந்திருக்கிறேன் என்று தோன்றுகிறது
சுய இரக்கம் சுரக்காத இந்தக் கணத்தில்.
கல்லுக்குண்டாய்க் கனக்கும்
விற்பனையாகாமல் இருப்புச் சிட்டைக்குள்
தொடர்ந்து ஊர்ந்துகொண்டிருக்கும்
வெண்கலச் சாம்பிராணிக் கரண்டிகளைக்
கும்பகோணத்திலிருந்து
சுமந்து வந்து கொண்டிருக்கும்
ஆடிய பாதம் தானா நான்?
தனிமையின் மூட்டத்துக்குள் புகையால்
சிலர் உள்ளே வந்தது எந்தக் கணத்திலோ
அந்தக் கணத்தில்தான்
ராஜமுந்திரி வெண்கலப் பானைக்குள் ஓடிப்போய்
ஒளிந்துகொண்டது சுயம்.
கரி அடுப்பில் ஏற்ற வேண்டியது தான் இனி.
கனிந்த கரித்துண்டு சாம்பிராணிப் புகை போடவும்
உதவக்கூடும்,
வெந்துபோன சுயத்துக்குப் படையல் போடும்போது.

2.

வான்கோவின் சூரியகாந்தி மஞ்சள்
ஆலிவ் பச்சையாக
உருமாறிக் கொண்டிருப்பதாகச்
சொல்கிறார்கள்
என்னுடைய
பித்தளை மஞ்சளில்
ஊர்ந்து கொண்டிருக்கிறது
கருப்பு

3.

ஊர்ந்து செல்கின்றன
கடையின் கல்தரையில்
சுவர்ப் பல்லிகள்

நகுலனின் நினைவுகளுடன்
பல்லிகளின் எச்சமும்
துடைக்கப்பட்டு

வார்த்தைகள் அடுக்கப்படுகின்றன
விற்பனைக்கு ●

# டோனி மாரிசனுடன் ஓர் உரையாடல்

**ஆங்கில மூலம்: கிராண்டா இதழ்  தமிழில்: ஸிந்துஜா**

நியூயார்க்கில் டோனி மாரிசனின் இல்லத்தில் நடந்த இந்த நேர்காணலுக்கு அவர் விதித்த ஒரே நிபந்தனை தன்னைப் புகைப்படம் எடுக்கக் கூடாது என்பதுதான். எந்தவிதமான கேள்வியையும் கேட்கலாம் என்றார். பதில் அளித்த பின் அதைத் திருத்தி நகாசு பண்ணும் வேலையை அவர் விரும்பவில்லை. உள்ளத்தில் இருப்பதுதானே வாக்காக வருகிறது என்ற தன்னம்பிக்கை காரணமாக இருக்க வேண்டும். அவருடைய தனித்துவம் மிக்க எழுத்தைப் போலவே இசையின் ஒலியும் நுண்ணுணர்வும் தெறிக்கப் பதிலளித்தார். இனவெறி, வெள்ளைத்தோல், நினைவுக்கும் மறதிக்கும் இடையே நடக்கும் போராட்டம், செக்ஸ் எழுத்து ஆகியவற்றைப் பற்றிப் பேசினார். சிரித்துக்கொண்டும், இளம் பிராயத்தில் கற்றுக்கொண்ட பாட்டுக்களைப் பாடிக்கொண்டும் பேட்டி தந்த அவர், இன்றைய அமெரிக்கக் குடியரசுத் தலைவரின் பெயரை உச்சரிக்க மறுத்தார். ஒரு மணிக் காலம் என்று தீர்மானித்திருந்த நேர்காணல் இரண்டு மணி நேரத்தை எடுத்துக்கொண்டு விட்டது.

பேட்டி கண்ட இருவரில் ஒருவரான சாரா லாடிப்போ மன்யிகா ஒரு ஆங்கில (பிரிட்டிஷ்) நைஜீரியப் பெண் எழுத்தாளர். நாவல், சிறுகதைகள் எழுதி வரும் இவர் தற்போது சான் பிரான்சிஸ்கோவில் வசிக்கிறார். மற்றொருவரான மரியோ கைஸர் கட்டுரைகள் எழுதும் ஆண் எழுத்தாளர். ஜெர்மனியில் பிறந்து தற்போது நியூயார்க்கில் பணியாற்றுகிறார்.



டோனியின் இல்லத்தில் விருந்தினருக்கான பாத்ரூமில் நோபல் பரிசு கிடைத்தது பற்றித் தெரிவிக்கும் கடிதம் பிரேமிடப்பட்டுத் தொங்குகிறது. எதிர்ப்புறச் சுவரில் டெக்சாஸ் மாநில நீதிமன்றம் டோனியின் 'பாரடைஸ்' நாவலை மாநிலத்தில் உள்ள சிறைக்கைதிகள் படிக்கக் கூடாது என்று தடை செய்த கடிதம், ஒரு பரிசைப் போலத் தொங்குகிறது. சிறைக்குள் அந்நாவல் கலவரத்தைத் தூண்டக்கூடும் என்று தடையாம்.

**சாரா:** உங்களை எப்படி அழைப்பது? புரஃபஸர், டாக்டர், திருமதி, மிஸ்?

**டோனி மாரிசன்:** டோனி!

**சாரா:** இந்தப் பேட்டிக்கு வாய்ப்பளித்ததுக்கு மிக்க நன்றி. நான் நைஜீரியாவைச் சேர்ந்தவள். சற்றுமுன் உங்கள் பாத்ரூமில் வோலே சோயிங்காவின் படத்தைப் பார்த்தேன். (அவர் நோபல் பரிசு பெற்ற நைஜீரிய எழுத்தாளர்)

**டோனி மாரிசன்:** ஆமாம். பாரீசில் நாங்கள் சந்தித்து மணிக்கணக்கில் பேசுவோம். இந்த சந்திப்பில் உலகப் பிரச்சினைகள் அனைத்தும் தீர்க்கப்படும்! சோயிங்காவுக்கு எந்தப் பிரச்சினையை எப்படித் தீர்க்க வேண்டும் என்று தெரியும்!

**சாரா:** இப்போதும் அவர் அப்படித்தான்.

**டோனி மாரிசன்:** ஆமாம். அந்தக் குரலுடன் (உரத்த குரலில் சோயிங்காவைப் போலப் பேசிக் காண்பிக்கிறார். )

**மரியோ:** சாராவும் நானும் உங்கள் புத்தகங்கள் மூலம் நண்பர்களானோம். நாங்கள் ஒரு எழுத்தாளர் பட்டறையில் கலந்துகொண்ட போது நான் எனது பாட்டனார்களைப்பற்றி எழுதிக்கொண்டிருந்தேன். இரண்டாம் உலகப் போரில் பங்குகொண்ட அவர்கள் இறுதி வரை வீடு திரும்பவேயில்லை. அப்போது சாரா உங்களுடைய 'ஹோம்' நாவலையும் அதன் ஒலிப்பதிவு நாடாவையும் கொடுத்தாள்.

**டோனி மாரிசன்:** ஆமாம். நான் என் புத்தகங்களை வாய்விட்டு வாசிக்கிறேன். என் எழுத்துக்களை நானே என் குரலில் கேட்பதை மிகவும் விரும்புகிறேன். இதனால் என் வார்த்தைகள் எப்படி ஒலிக்க வேண்டும் என்று நான் அளவிட முடிகிறது. எனது புத்தகங்கள் பிரசுரமாக ஆரம்பித்த போது பதிப்பாளர் அவற்றை டிஸ்க்குகளில் பதித்தார். அவற்றை வாசித்த பெண்கள் மிகச் சிறந்த நடிகைகள் என்பதில் சந்திதேகமில்லை. ஆனால், அவர்கள் குரல்கள்? முதல் தடவையாக ஒன்றைக் கேட்ட போது என் பதிப்பாளரிடம், 'இது சரியாக வரவில்லை' என்றேன். அது 'பிலவட்' என்னும் நாவல் குறித்தது. 'டட்-ட-ட-ட-டட்-பூம்-டட்- டட்-டட்-டட்-' என்று ஆடியோவில் வருவதைக் காண்பித்து 'சகிக்கவில்லை' என்றேன். அதன் பிறகு நான் என் குரலில் வாசிக்க ஆரம்பித்த போதுதான் தெரிந்தது, அதுவரை ஒலியில் ஏற்றப்பட்டவை எல்லாம் என் சுருக்கப்பட்ட நாவல்களிலிருந்துதான் என்று. நானாக இழுத்துப் போட்டுக் கொண்ட தொந்திரவு என்று பொருமிக்கொண்டே செய்தேன்.



**மரியோ:** உங்களது சமீபத்திய நாவலான 'காட் ஹெல்ப் தி சைல்ட்'ன் முதல் வரியே, 'அது என் குற்றமல்ல' என்று வருகிறது. ஒரு தாய் அப்போதுதான் தான் ஈன்றெடுத்த குழந்தையைப் பார்த்துக் கூறுகிறாள்.

டோனி மாரிசன்: ஆமாம். பயத்துடன்.

**மரியோ:** குழந்தையின் தோல்நிறம் தனது நிறத்தை விட அதிகக் கறுப்பாயிருக்கிறதே என்னும் பயத்துடன் அந்தத் தாய்......

டோனி மாரிசன்: அவளுடைய, குழந்தையினுடைய எதிர்காலம் பற்றி......

**மரியோ:** உங்களது மற்ற நாவல்களைப் போலில்லாது இந்த நாவலின் கதை நிகழ்காலத்தில் நடக்கிறது. எப்படி தோலின் நிறம் இந்த நாட்டை அழிக்க அல்லது ஆக்கக் கூடிய சக்தியைப் பெற்றுவிட்டது?

டோனி மாரிசன்: எங்களின் வாழ்வு அத்தகைய ஆரம்பத்தைக் கொண்டுவிட்டது. இந்த நாடு ஆப்பிரிக்கத் தொழிலாளர்களை இறக்குமதி செய்து அவர்களைக் கசக்கிப் பிழிந்து, வாங்கிக் கொண்ட வேலைக்குக் கூலி எதுவும் தராமல் இருந்ததோடு மட்டுமின்றி, அவர்களது குழந்தைகளையும் அடிமை களாக ஆக்கி உழைக்கச் செய்து தன்னைப் பெரிதாக ஆக்கிக்கொண்டு விட்டது. நான் 'எ மெர்சி' என்ற நாவலில் சித்தரித்த அமெரிக்காவில், இனவெறி இந்த நாட்டின் அடையாளமாக இருக்கவில்லை. (அமெரிக்காவில் இருந்த) சேலம் நகரில் நடைபெற்ற சூனியக்காரர்கள் மீதான வேட்டைகளும் கலவரங்களும் நிகழ்ந்த காலத்துக்கும் சற்று முன்பாக இருந்த அமெரிக்காவில் மதத்தை முன்னிறுத்தி கொலைகள் நிகழ்ந்தன. மதவாதிகள் இவற்றைக் கண்டு கொதித்து எழுந்தார்கள் - நிறத்தை வைத்து அல்ல. ஆனால், அதற்குப் பின்? 'ஆற்றுப்படுத்துகிறோம்', 'ஆறுதல் கூறுகிறோம்' என்று பிரிவினையை ஏற்படுத்தி விட்டார்கள். வெள்ளையர்கள் வெள்ளையர்களுடன் சேர்ந்து கொண்டார்கள். யோசித்துப் பாருங்கள்: நீங்கள் ஜெர்மனியிலிருந்தோ ருஷ்யாவிலிருந்தோ அல்லது எங்கிருந்தோ இருந்து வந்தாலும் படகை விட்டு இறங்கி அமெரிக்கராக ஆக விழையும் போது நீங்கள் வெள்ளைத்தோல் கொண்டிருக்க வேண்டும். அவ்வளவுதான். இதுதான் இந்த நாட்டில் 'வெள்ளையரல்லாத மக்களை' உருவாக்கும் ஒருங்கிணைந்த சக்தி'யாகி விட்டது. இதே நிகழ்வு இப்போது ஐரோப்பாவிலும் தொடங்கியாயிற்று என்று நினைக்கிறேன். நான் சொல்வது என்னவென்றால் நீங்கள் சுவீடனிலிருந்து வந்தால் ஸ்வீடிஷ்காரர். 'நான் வெள்ளை ஸ்வீடிஷ்காரன்' என்று அவர் சொல்லிக்கொள்ள வேண்டியதில்லை.

**மரியோ:** புரிகிறது. நான் ஜெர்மன். ஆனால், இங்கு வரும்வரை 'நான் வெள்ளைத் தோல்காரன்' என்ற பிரக்ஞை எனக்கு இருந்ததில்லை.

டோனி மாரிசன்: இது முக்கியமான விஷயம். இனவெறி எதிர்ப்பாளரான ஃபிரடெரிக் டக்லஸ் வெள்ளையர்களிடம் சிறைப்பட்ட போது தன்னைச் சரியாக நடத்துமாறும் உடனே விடுதலை செய்யுமாறும் கேட்டுக்கொண்டார். அவரது அந்த எழுத்து வெள்ளையர்களுக்கானது. எனக்கானது அல்ல. டால்ஸ்டாய் ஒஹையோ மாகாணத்திலுள்ள யுவதிகளுக்காக எழுதவில்லை. அது ரஷ்யர்களுக்கானது. நான் கறுப்பினத்தைச் சேர்ந்தவர்களுக்காக எழுதுகிறேன். அது நன்றாக இருந்து ஆப்பிரிக்க-அமெரிக்க இனத்தைச் சேராதவர்களாலும் படித்து ரசிக்கப்பட்டால் நல்லது என்றே நினைக்கிறேன்.

சாரா: ஆமாம்.

டோனி மாரிசன்: இந்த சுவாரஸ்யமான விஷயத்தைப் பாருங்கள். ஐரோப்பாவில் இருப்பவர் கள் அமெரிக்காவில் விரும்புவது என்ன? கறுப்பினத்தவரிடமிருந்து வந்ததைத்தான்! ஜாஸ் இசை!! மொழியையும் கூட! நாங்கள் இல்லாத அமெரிக்காவை நினைத்துப் பார்க்க முடியாது. அம்மாதிரி இருந்தால் நான் இங்கே வர மறுத்து விடுவேன். நான் என் முதல் நூலை வெளிக் கொண்டுவர முயன்றபோது, 'இனவெறி என்பது மிகுந்த வலியைத் தரக்கூடியது. நீங்கள் வெள்ளையரல்ல என்ற உண்மையுடன் சேர்ந்துகொண்டு, உங்கள் இளமையும், எளிதில் பாதிக்கப்படக்கூடிய நிலைமையும் உங்களை கொன்று விடும் ஆபத்து இருக்கிறது' என்று எழுத விரும்பினேன். கடைசியில் இவ்வளவு ஆண்டுகளாய், புத்தகங்களை படிப்பதிலும், அவற்றை மற்றவர்களுக்காக எடிட் செய்வதிலும், நூலகங்களில் வேலை பார்ப்பதிலும் செலவழித்த காலத்தை நினைத்துப் பார்த்த போது, 'உன்னைப் பற்றி நீ எழுதவே இல்லையே?' என்று காலம் என்னைப் பார்த்துக் கேட்டது போலிருந்தது. எனவே, நான் படிக்க வேண்டும் என்றால் நான் எழுத வேண்டும் என்று தீர்மானித்தேன்.

**மரியோ: உங்களது 'காட் ஹெல்ப் தி சைலட் நாவலில் குழந்தைகள் கஷ்டப்படுகிறார்கள். 1960களில் உங்களுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்தன. அது குடி உரிமைகளுக்காக நீங்கள் போராடிய காலம். அப்போது அமெரிக்கா உங்கள் குழந்தைகளுக்குப் பிரகாசமான எதிர்காலத்தைத் தரும் என்ற நம்பிக்கை இருந்ததா?**

டோனி மாரிசன்: இல்லையில்லை. நான் இங்கு வெகுகாலமாக இருக்கிறேன்.

இப்போதுதான் அமெரிக்காவில் வதை செய்யப் படும் எங்கள் மக்களை, கொலை செய்யப்படும் கறுப்பர்களைப் பற்றிய செய்திகளை வெளியிட முன்வந்திருக்கிறார்கள். முன்பு இதைப் பற்றிப் பேச எங்களுக்கு உரிமை இல்லாதிருந்தது. செய்தித்தாள்கள் மூச்சு விடா. இப்போது ட்ரேவான் மார்ட்டினும், கொல்லப்பட்ட மற்றொரு சிறுவனும் பத்திரிகைகளில் பேசப்படுகிறார்கள். என் வாழ்க்கையில் ஒரு ஐம்பது அறுபது வருஷங்களுக்கு இம்மாதிரி விஷயங்களைப் பொது வெளியில் பேசக் கூடாதென தடைகள் இருந்தது உங்களுக்குத் தெரியுமா? அதை பற்றி வருத்தப்படக் கூடாதா? ஆனால், அதெற்கெல்லாம் அனுமதி கொடுக்கப்படவில்லை. இப்போது பல மாற்றங்கள் வர ஆரம்பித்திருக்கின்றன. ஆனால், அதற்குள் இங்கு 'குடியரசுத் தலைவர்' என்று அழைக்கப்படும் ஒருவர், முன்னெடுத்து வைத்த காலைப் பின்னுக்குத் தள்ளுவதில் குறியாக நிற்கிறார். இது மிகவும் ஆபத்தான செயல். மட்டமான முயற்சியும்கூட. அவரைப் பற்றிச் சிந்திக்கக் கூடாது என்றுதான் என் மனம் விரும்புகிறது. ஆனால், அதையும் மீறி அவரை நினைத்தாலே எரிச்சல் மண்டுகிறது.

சாரா: 'மறுபடியும் அமெரிக்காவைத் தலை சிறந்த'தாக ஆக்குவதா?

டோனி மாரிசன்: 'மறுபடியும் அமெரிக்காவைத் தலைசிறந்ததாக ஆக்குவது' என்றால் 'மறுபடியும் அமெரிக்காவை வெள்ளையர் நாடாக ஆக்குவது!'

**சாரா: உங்கள் படைப்புகளைப் படிப்பதும் கேட்பதும் உங்கள் எழுத்தின் படிக்க வைக்கும், கேட்க வைக்கும் திறன் என்று நினைக்கிறேன். உங்கள் எழுத்துக்களை ஒருவர் உரத்த குரலில் படிக்க வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா?**

டோனி மாரிசன்: ஆம், என் வாசகர் தன் குரலைக் கேட்பதை மிகவும் விரும்புகிறேன். என் குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும் அதைத்தான் செய்தார்கள். என் பாட்டனாரைப் பற்றிப் பெருமையாகச் சொல்லுவார்கள், அவர் பைபிளை அட்டை முதல் அட்டை வரை ஐந்து முறை படித்தவர் என்று. ஒரு கட்டத்தில் கறுப்பினத்தவர் படிப்பது என்பதும் குற்றமாக, சட்டத்திற்கு விரோதமானதாகக் கருதப்பட்டது. அதேமாதிரி ஒரு வெள்ளையர் கறுப்பருக்குக் கற்றுக் கொடுப்பதும் சட்டம் அங்கீகரிக்காத செயலாக இருந்தது. அப்படிச் செய்தால் ஒன்று அவர் அபராதம் கட்ட வேண்டும் அல்லது ஜெயிலுக்குப் போக வேண்டும்.

என் பாட்டனார் பள்ளிக்குச் செல்லவில்லை. அவர் ஒரே ஒரு முறை சென்றதும் இனிமேல் ஸ்கூலுக்கு வர மாட்டேன் என்று சொல்லுவதற்குத்தான்! அவருடைய சகோதரி அவருக்குக் கற்றுக் கொடுத்தாள். அவரை எல்லோரும் பெரிய தந்தை என்று அழைப்பார்கள். நானும் அவ்வப்போது நினைப்பதுண்டு, வேறு எதை அவரால் வாசித்திருக்க முடியும்? அவர் இருந்த இடத்தில் புத்தகங்களோ நூலகமோ இல்லாதிருந்தது. பைபிள் மட்டும்தான் கிடைத்தது. படிப்பதன் மூலம் அதிகாரத்தைத் தனது கைக்குள் கொண்டு வர முடியும் என்று அவர் நினைத்ததாக எனக்குத் தோன்றுகிறது.

என் வீட்டில் எல்லா இடங்களிலும் புத்தகங்கள் இறைந்து கிடந்தன. என் அம்மா 'மாதப் புத்தக நூலக'த்தில்' உறுப்பினராய் இருந்தாள். அவள் முயற்சிகள் அடிமைத்தனத்துக்கு எதிராக இருந்தன. குடும்பத்திலிருந்தவர்கள் படித்தார்கள், கதை சொன்னார்கள், பாடினார்கள். என் அம்மா பகல் இரவு என்றில்லாமல் எப்போதும் பாடிக் கொண்டிருப்பாள். துணிகளைத் துவைக்கும் போது, அவற்றை உலர்த்தும் போது, சமையல் செய்யும் போது என்று எப்போதும் அவள் பாடிக் கொண்டிருப்பாள். அது எனக்குத் தனி உத்வேகத்தைத் தந்தது. ஆனாலும், எனக்கு முப்பத்தியொன்பது வயதாகும் வரை நான் எழுதத் தொடங்கவில்லை. எழுத வந்த பிறகு என் வார்த்தைகள் இசையை வெளிப்படுத்த வேண்டும் என்று விரும்பினேன். என் கதையின் உள்ளடக்கத்திற்கு இசை உருகி இருக்க வேண்டும்.

**சாரா: உங்கள் கதைகளில் நீங்கள் மறதிக்கும் ஞாபகத்துக்கும் நடுவில் நடக்கும் போராட்டத்தைச் சித்தரிக்கிறீர்கள். 'பிலவட்'டில், 'அது ஒன்றும் கடந்து சென்றுவிடக் கூடிய கதையல்ல' என்று திரும்பத் திரும்ப சொல்லப்படுகிறது. 'காட் ஹெல்ப் தி சைல்ட்'டில் 'குணமாவதின் மிக மோசமான விளைவு ஞாபகசக்தியை இருத்திக் கொள்வதுதான்' என்று எழுதுகிறீர்கள்.**

டோனி மாரிசன்: மகிழ்ச்சியின் இடத்தை அடைவது என்பது - நான் மகிழ்ச்சியைப் பற்றிப் பேசினாலும் என் புத்தக மனிதர்கள் எப்போதும்



வீழ்ந்தே கிடக்கிறார்கள் - அறிவை மேம்படுத்திக் கொள்வது என்பதுதான். முடிவை அடையும் முன் உங்களுக்கு அதை பற்றித் தெரிந்திராவிட்டால் அதுதான் ஞானம். அந்தத் தந்தியை மீட்ட முடிந்திருக்க வேண்டும். முன்பறியாததை இறுதியில் எதிர்பாராவிதமாய் அறிய நேரிடுவது உன்னதம். அந்தப் புத்தகத்திலும் வாழ்க்கையிலும் ஒருவழிப் பாதையே எதிர்ப்படுகிறது. வழியில் ஏதோ ஏற்பட எல்லோரும் விழித்தெழுகிறார்கள். ஆனால், 'காட் ஹெல்ப் தி சைல்ட்' என்பது எனக்குப் பிடிக்காத தலைப்பு.

**மரியோ:** நீங்கள் என்ன தலைப்பு கொடுக்க நினைத்தீர்கள்?

**டோனி மாரிசன்:** ஒரு தலைப்பு கொடுத்தேன். ஆனால், இப்போது அது ஞாபகமில்லை.

**மரியோ:** நீங்கள் மாற்றியிருக்க வேண்டியதுதானே!

**டோனி மாரிசன்:** ஐயோ! கொலை விழும்!

**சாரா:** நோபல் பரிசு பெற்றவர் என்ற முறையில் உங்களுக்குத் தனி அந்தஸ்து இருக்கிறதே.

**டோனி மாரிசன்:** அதெல்லாம் ஒன்றுமில்லை. (நடித்துக் காட்டுகிறார்)

'எங்காவது எப்படியாவது தொலைந்து போங்கள்! ஆனால், இதுதான் என் தலைப்பு!'

'இல்லையில்லை. உனக்கு அந்த உரிமையெல்லாம் கிடையாது!'

அவர்கள் கோடிக்கணக்கில் பணம் புரட்டுவார்கள். புத்தகம் வெளியிடுவது என்னவோ எனக்குச் செய்யும் பரோபகாரம் என்றுதான் நடந்துகொள்வார்கள். நானும் என் குழந்தைகளும் பேரக் குழந்தைகளும் போய்ச் சேர்ந்த பின்னும் அவர்களுக்கு என் புத்தகங்கள் மூலம் பணம் கிடைத்துக் கொண்டிருக்கும். நான் இந்தத் தொழிலில் ரொம்ப காலம் வேலை பார்த்துவிட்டேன். எனக்கு கொஞ்சமும் பிடிக்கவில்லை. அது சரி, நாம் எந்தப் புத்தகத்தைப் பற்றி பேசிக் கொண்டிருந்தோம்?

**சாரா:** 'காட் ஹெல்ப் தி சைல்ட்'

**டோனி மாரிசன்:** அதுதான். எல்லாம் ஒன்றுக்குள் ஒன்றாக. அந்தப் பெண் படு கறுப்பு. ஆனால், அழகி. அவளுடைய காதலன் மகா சோம்பேறி. இரண்டு பேரும் தமக்குள் புதைந்துகொள்பவர்கள். அவர்கள் ஒரு புதிய இடத்திற்கு வருகிறார்கள். அங்கே அவர்கள் யாரோ ஒருவரைக் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. 'நான், நான், நான்' என்று எப்போதும் அவர்களிடம் தொற்றிக் கொண்டிருக்கும் ஜெபத்திலிருந்து விடுபட்டு வெளியே வர அந்த அனுபவம் அவர்களுக்கு உதவுகிறது. அதனால் அவர்கள் இறுதியில் ஒருவரையொருவர் மதிக்கிறார்கள். அவர்களிடையே நேசமும் உருவாகிறது.

**மரியோ:** அந்த நாவலில் 'தோலின் முக்கியத்துவம்' பற்றி எழுதுகிறீர்கள். அது எப்படி கறுப்பர்களுக்கு இடையேகூட ஒரு தனி இடத்தை அளிக்கிறது? பாரக் ஒபாமா இன்னும் கறுப்பாக இருந்திருந்தால் அவர் குடியரசுத்தலைவராக ஆகியிருக்க முடியுமா?

**டோனி மாரிசன்:** அவர் அவ்வளவு கறுப்பு இல்லை!

**மரியோ:** ஆனால், நீங்கள் குறிப்பிடும் சூடான் நாட்டுக் கறுப்பு இல்லையே அவர்?

**டோனி மாரிசன்:** ஆமாம். சூடான் நாட்டுக் கறுப்பு அலாதியானது. இங்கிதமானது! எத்தியோப்பியக் கறுப்பு மிக அழகானது. எல்லா எத்தியோப்பியர்களும் அழகானவர்கள்! அசிங்கமான எத்தியோப்பியர் என்று யாரும் கிடையாது. ஆனால், நான் பிறந்தது உருக்கு ஆலைகள் நிரம்பிய ஊர்!

**மரியோ:** லோரெய்ன், ஒஹையோ.

**டோனி மாரிசன்:** நிறைய அகதிகள் சூழ்ந்த ஊர். ஒரே ஒரு உயர்நிலைப் பள்ளி. என் குடும்பத்தில் கல்லூரிக்குச் சென்ற முதல் ஆள் நான்தான். நான் படித்த ஹோவர்ட் காலேஜில்தான் இந்த நிற அந்தஸ்து பற்றிக் கேள்விப்பட்டேன். அப்போது வாஷிங்டன் முழுவதிலும் கறுப்பின நடுத்தரக் குடும்பங்கள் நிறைந்திருந்தன. அவர்கள் புள்ளி விவரக் கணக்கு அலுவலகங்கள், மகளிர் கழகங்கள், மற்ற கம்பனிகளில் வேலை பார்த்தார்கள். கல்லூரியில் அவர்களைப் பற்றி மற்றவர்கள் பேசியது எனக்கு முட்டாள்தனமாகப் பட்டது. நிறத்தை வைத்து நண்பர்களைத் தேடிப் பிடிக்க நான் விரும்பவில்லை.

பின்னாளில் நான் அங்கேயே படிப்பு சொல்லிக் கொடுக்கச் சென்ற போது என் வகுப்பில் ஸ்டோக்லி கார்மிக்கேல் (பின்னாளில் மக்கள் குடியுரிமைக்கான போராட்டத்தில் ஈடுபட்டு உலகப் புகழ்பெற்ற கறுப்பினத் தலைவரானவர்) மாணவராக இருந்தான். 'நீ பட்டதாரியான பின் என்ன செய்யப் போகிறாய்?' என்று கேட்டேன். 'எனக்கு இறையாண்மைக் கழகத்தில்

வேலை கிடைத்திருக்கிறது. ஆனால், நான் குடியுரிமை போராட்டத்தில் கலந்துகொள்ளப் போகிறேன்' என்றான். அதனால், அரசியல் என்பது நிறம் பற்றியது அல்ல, மாறாக மனித உரிமைக்கு குரல் கொடுப்பது பற்றியது.

நான் மாணவியாய் இருந்த போது உலகம் அப்படித்தான் இருந்தது. வாஷிங்டனில் நாங்கள் - கறுப்பினப் பெண்கள் - ஒரு டிபார்ட்மெண்ட் ஸ்டோரில் இருந்த பாத்ரூமைத்தான் உபயோகிக்க முடியும். வேறெந்த இடத்திலும் உள்ள பாத்ரூமுக்குள் நாங்கள் செல்ல முடியாது. பஸ்களில் 'வெள்ளையருக்கு மட்டும்' என்று போர்டு தொங்கும். அம்மாதிரி போர்டு ஒன்றைத் திருடி என் தாய்க்கு நான் ரகசியமாக அனுப்பினேன். வாஷிங்டன் ஒரு பிரிக்கப்பட்ட நகரம். நீரூற்றுக்கள் நிரம்பிய இடம். கறுப்பர்களுக்கு ஒன்று, வெள்ளையர்களுக்கு ஒன்று. நீரூற்றுக்களைப் போய்ப் பிரிப்பதில் உள்ள நீசத்தனம். அப்படிச் செய்வதால் அவர்கள் உயர்ந்த மனிதர்களாக ஆகிவிடுவார்களா?

**மரியோ: டொனால்ட் டிரம்ப் ஆப்பிரிக்க அமெரிக்கர்களிடம் வோட்டு கேட்டு வரும் போது 'நீங்கள் இழக்க இனிமேல் என்ன இருக்கிறது?' என்று கேட்டது பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?**

**டோனி மாரிசன்:** அது ஒரு முட்டாள்தனமான கேள்வி என்று நினைக்கிறேன். நாங்கள் இழக்கப் போவது எல்லாவற்றையும்தான். நீ எங்களைச் சுற்றி வெடிகுண்டுகளை எறிகிறாய். அந்த மனிதனின் தலைக்கனம்! அவருடைய அகராதியில் அவருக்குத் தெரிந்த சொற்கள் மொத்தம் 77. பிலிப் ராத் அதை எண்ணி உறுதி செய்திருக்கிறார்! 77 வார்த்தைகள்!

**மரியோ: நாம் டிரம்பை விட்டு ஒபாமாவுக்கு வருவோம். அவரிடமிருந்து 'சுதந்திரத்துக்கான குடியரசுத் தலைவரின் மெடல்' வாங்கிய போது உங்கள் மனநிலை எப்படி இருந்தது? அப்போது ஒபாமா உங்கள் காதில் என்ன முணுமுணுத்தார்?**

**டோனி மாரிசன்:** அப்போது நீங்கள் அங்கே இருந்தீர்களா?

**சாரா/மரியோ: இல்லை வீடியோவில் பார்த்தோம்.**

**டோனி மாரிசன்:** என் காதில் முணுமுணுத்தார். உங்களிடம் சொல்லுகிறேன். இது முக்கியமான விஷயம்: அவர் சொன்னது என்னவென்று எனக்குத் தெரியாது!

**மரியோ: ஆனால், நீங்கள் மகிழ்ச்சியுடன் காணப்பட்டீர்களே!**

**டோனி மாரிசன்:** ஆமாம், அங்கிருந்து கிளம்பிப் போகும் போது அவர் என்ன சொன்னார் என்று நினைவுபடுத்திப் பார்த்தேன். எனக்கே சங்கடமாகி விட்டது. நான் அதற்குப் பின் பாரீஸ் சென்ற போது பிரான்சிலிருந்த தூதுவரைப் பார்த்தேன். அப்போது இந்த மாதிரியான இக்கட்டு ஏற்பட்டதைச் சொன்னேன். அதற்கு அவர், 'இதோ பார். ஒருமுறை ஒபாமா என்னிடம் 45 நிமிடம் உரையாடினார். ஆனால், அவர் என்ன பேசினார் என்று எனக்குத் தெரியாது!' என்றார்.

**சாரா: நீங்கள் ஒபாமாவைப் பார்த்து பிரமிப்படைந்திருக்க வேண்டும்.**

**டோனி மாரிசன்:** உண்மைதான். ஒருமுறை ஒபாமா கலந்துகொண்ட பார்ட்டிக்கு என் மகனுடன் சென்றேன். அவன் அவரிடம், 'நீங்கள் என் அம்மா விடம் ஏதோ காதில் முணுமுணுத்தீர்களாம். அது என்ன என்று அவளுக்கு ஞாபகம் இல்லை என்று அவள் சொல்லுகிறாள். என்ன சொன்னீர்கள்?' என்று கேட்டிருக்கிறான். அதற்கு அவர், 'அவளிடம் ஐ லவ் யூ என்றேன்!' என்று பதிலளித்தாராம். நான் ஏன் முழித்தேன் என்று எனக்கு இப்போது தெரிகிறது. நீங்கள் ஒருவருடன் முக்கிய தருணத்தைச் செலவழித்துக் கொண்டிருக்கும் போது வேறு எந்தப் பிரக்ஞையும் எழுவதில்லை.

**சாரா: நாம் காதலைப் பற்றி பேசுவோம். உங்கள் நண்பர் ஜேம்ஸ் பால்ட்வின்.....**

**டோனி மாரிசன்:** ஓ, எஸ்.

**சாரா: பால்ட்வின் ஒருமுறை, 'கலைஞன் என்பவன் ஒரு காதலனைப் பிரதிபலிப்பவன். நான் உன்னைக் காதலிக்கிறேன் என்று அவன் சொன்னால் உனக்குத் தெரியாத உலகைக் காண்பிக்கிறேன் என்று அவன் சொல்வதாக அர்த்தம்' என்று கூறியிருக்கிறார். ஒரு கலைஞன் செய்ய வேண்டியது என்ன?**

**டோனி மாரிசன்:** பால்ட்வின் சொன்னது நகைப்புக் குரியது. இப்போது நான் சொல்வது சற்று ஆரவாரமாகப் படலாம். ஆனால், ஒரு கலைஞன் என்பவன் - ஓவியனோ எழுத்தாளனோ - புனிதன். கடவுளை போன்றவன். சாதாரண ஜனங்களின் உணர்வுகளுக்கும் அவர்களின் அறியும் தன்மைகளுக்கும் மேலான ஒழுங்குமுறை கொண்ட அவனை எதிர்கொள்ளும் தரிசனம் எல்லோருக்கும் கிட்டுவதில்லை. அது மற்றவர் களின் பார்வைகளுக்கு மேலெழுந்தது; அப்பாற்பட்டது.

எனக்கு ஓவியர்களை நினைக்கும் போதெல்லாம் ஆச்சரியமாக இருக்கிறது. ஓவியனின் கைக்கும் மூளைக்கும் இடையே ஒளிரும் உள்ளொளியின் ரசாயனம்தான் என்ன? அதனால்தான் புரியவில்லை என்று குற்றம் சாட்டுபவர்களை நான் மதிப்பதில்லை. ஒரு விமரிசகனின் பாஷை கலைஞனின் நடமாட்டத்தை அவ்வளவு தெளிவாகக் கணித்து விடுவதில்லை என்றுதான் நான் நினைக்கிறேன்.

**சாரா: உங்கள் பாத்திரங்களுக்குப் பெயர் வைப்பது பற்றி?**

**டோனி மாரிசன்:** அதை அவர்களே வைத்துக்கொள்ளுகிறார்கள். சிலசமயம் நான் வைக்கும் பெயர்கள் படு அபத்தமாக இருக்கும். கடைசியில் அவை தானாகவே கழன்று விழுந்துவிடும். நான் 'சாங் ஆஃப் சாலமன்' எழுதிய போது அதில் வரும் ஒரு பெண் பாத்திரத்துக்கு பிலேட் என்று பெயர் வைத்தேன். எழுத ஆரம்பித்தபின் அவளே நாவலை ஆக்கிரமித்துக் கொண்டாள். நிற்காமல் பேசிக் கொண்டேயிருந்தாள். ஒரு கட்டத்தில் நான் பொறுமை இழந்து, 'இது என் நாவல். நீ வாயை மூடு' என்று சொல்லும்படி ஆகிவிட்டது. ஒரு காட்சியில் அவள் இறந்துவிட்ட பாட்டிக்காக அழுது கொண்டே,



'அவள் எல்லோராலும் விருப்பப்பட்டாள்' என்று கூறுவாள். அவ்வளவுதான். அதற்குப் பின் அவளைப் பேச விடவில்லை. அவள் அந்த நாவலில் மற்ற பாத்திரங்களைக் கட்டுப்படுத்தும் சர்வ வல்லமை கொண்டிருந்தாலும் கூட.

**மரியோ:** உங்களுக்குப் பனிரெண்டு வயதாகும் போது கத்தோலிக்கராக ஞானஸ்நானம் செய்விக்கப்பட்டு அந்தோணி என்று பெயர் சூட்டிக் கொண்டீர்கள். இது பின்னால் டோனியாகிவிட்டது. இந்தப் பெயர் அந்தோணி முனிவரைக் குறிப்பதா? அவர் உத்வேகத்துடன் கிறிஸ்துவ மதப் பிரசங்கங்கள் செய்தார். தவறியவர்களைக் கடைத்தேற்றம் செய்யும் முனிவராயிருந்தார். உங்களை பொறுத்தவரை தவறியவைகள் என்று ஏதாவது உண்டா?

**டோனி மாரிசன்:** ஆம், ஒன்று என் மகன். இரண்டாவது, சென்றுவிட்ட ஆனால், நான் திரும்பப் பெற விரும்பும் என் வாழ்வின் சில தருணங்கள்.

**மரியோ:** குறிப்பாக?

**டோனி மாரிசன்:** என் இளங்கலைப் படிப்புக் காலம். அங்கே கற்றுக்கொள்ள நிறைய விஷயங்கள் இருந்தன. ஒரு நாடகக் குழுவில் இருந்தேன். பல இடங்களுக்குச் சென்றோம். நாட்டின் தென்பகுதிகளுக்குச் சென்றது அதுதான் முதல் தடவை. ஒரு ஹோட்டலில் தங்க வைத்தார்கள். அங்கு சென்று சற்றுக் கழித்துதான் தெரிந்தது, அது ஒரு விபசார விடுதி என்று. அடித்துப் பிடித்துக்கொண்டு எங்களை அழைத்துச் சென்றவர் ஒரு உள்ளூர் பாதிரியாரிடம் விஷயத்தைச் சொன்னார். பதினைந்து நிமிடங்களில் உதவி வந்துவிட்டது. தனி நபர் வீடுகளில் நாங்கள் தங்க வைக்கப்பட்டோம். நானும் என் சிநேகிதியும் சென்ற வீட்டில் இருந்த பெண் எவ்வளவு நல்லவள்! அந்த இடம்! எவ்வளவு அழகாக இருந்தது! அந்தப் வீட்டுப் பெண்மணி துணிகளைப் புதர்கள் மேல் இட்டு உலர்த்தியிருந்தாள். அந்த உடைகளிலிருந்து வந்த வாசனை! ஆஹா! அவள் சாப்பிடப் பிரமாதமான உணவுகள் கொடுத்தாள். நாங்கள் தந்த பணத்தை வாங்க மறுத்துவிட்டாள். கடைசியில் நாங்கள் கிளம்பும் போது தலையணைக்கு அடியில் பணத்தைப் புதைத்துவிட்டு வந்தோம்.

**மரியோ:** இது உங்கள் 'ஹோம்' நாவலை நினைவூட்டுகிறது.

**டோனி மாரிசன்:** ஆமாம். அந்த நாவலில் அவனைக் கறுப்பன் என்று குறிப்பாக நான் கூறவில்லை. ஆனால், என் பதிப்பாளர் 'அவன் வெள்ளையனா அல்லது கறுப்பானா என்று தெரியவில்லையே? அப்படிக் காண்பிப்பது முக்கியம்' என்றார். முதலில் நான் மறுத்தாலும் பிறகு ஒப்புக்கொண்டேன். 'அந்த வெள்ளைக்காரியை முதலில் அவர்கள் சுட்டார்கள் என்று 'பாரடைஸ்' நாவலில் நிறத்தைக் குறிப்பிட்டு எழுதியது போல எழுதத் தீர்மானித்தேன். அம்மாதிரி எழுதுவது எதோ ஒரு விடுதலை உணர்ச்சியைத் தருவது போல இருந்தது. வெறுமனே 'கறுப்பன்' என்று எழுதுவதில் ஒரு பிரயோஜனமும் இல்லை. நிகழ்வுகளுடன் நிறத்தைச் சுட்டிக்காட்டி படிப்பவரிடம் தாக்கத்தை ஏற்படுத்துவதாக ஒரு எழுத்து இருக்க வேண்டும்.

என் தந்தையின் பாட்டி ஒரு செவிலித் தாயாக

வேலை பார்த்தாள். உயரமான தோற்றம் உடையவள். அவளுக்குத் தெரியாத விஷயம் என்று எதுவுமே கிடையாது. எப்போதாவது எங்களைப் பார்க்க வருவாள். கையில் ஒரு பிரம்பு வைத்திருப்பாள். அதை வைத்து என்னையும் என் சகோதரியையும் சுட்டிக்காட்டி, 'இவை இரண்டும் எதற்காக இப்படி வெளிறிக் கிடக்கின்றன?' என்பாள். நாங்கள் எங்களுடைய நிறத்தைப் பற்றி அப்போது பெருமையாக நினைத்துக் கொண்டிருந்தோம். பெரிய பாட்டி நல்ல அட்டைக் கறுப்பு. ஆனால், மினுமினுக்கும் கறுப்பு! அசல் ஆப்பிரிக்க நிறம் அவளது. எங்கள் நிறம் என்னவோ தேய்ந்து மங்கிப் போய்விட்டது போல அவள் பார்த்தாள். இது எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

சாரா: நாம் செக்ஸ் பற்றி பேசலாமா?

டோனி மாரிசன்: ஓ, தாராளமாக. அதைப் பற்றிப் பேசி ஆயிரம் ஆண்டு காலம் ஆகிவிட்ட மாதிரி இருக்கிறது!

சாரா: நீங்கள் பாலுறவுக் காட்சிகளை மிகவும் வருணித்து எழுதியிருக்கிறீர்கள்!

டோனி மாரிசன்: ஆமாம். நான் மற்றவர்களைவிட அதை நன்றாக எழுதுவதாக நினைக்கிறேன்.

சாரா: எப்படி?

டோனி மாரிசன்: மருத்துவர்களின் குறிப்புகளைப் போல் செக்ஸ் காட்சிகளை மற்றவர்கள் எழுதுகிறார்கள். மார்பகங்கள், ஆண் குறி என்று அங்க வர்ணனைகள் மாத்திரம் பாலுறவுக் காட்சிகளை நிர்ணயித்து விடாது. உடலுறவு கொள்ளும் செயலை இயந்திரத்தனமாகப் பிரதிபலிப்பது எளிமையானது. என்னுடைய 'தி ப்ளூ ஐ'யில் அந்தப் பெண் ஒரு வாலிபனிடம் உறவுகொள்ள முயலும் போது அவளை எந்தக் கட்டுப்பாடுகளும் தடுத்து நிறுத்துவது இல்லை. 'தந்தத்'தின் தோலை அவள் வெறியுடன் இழுத்துக் கவ்வுகிறாள். ஆமாம். அவள் அவனுக்குக் கீழே செல்ல அஞ்சுவதில்லை. செக்ஸை மற்றொரு செயலுடன் இணைத்துப் பார்ப்பதில்தான் சுவாரஸ்யம் இருக்கிறது.

சாரா: 'பிலவட்' நாவலில் சோளக் கருது தின்பதை சஜஸ்டிவ் ஆக எழுதியிருப்பீர்கள்.

டோனி மாரிசன்: ஆம். சோளக் கருதுகள் காற்றில் அசைந்தசைந்து ஆடுவதாகவும் மற்றவர்கள் அதை பார்த்துக் கொண்டிருப்பதாகவும்.....

சாரா: உங்கள் வருணனை: 'நாய்களைப் போல் விறைப்பாக அந்தக் கருதுகள் பகலில் நடனமாடுவதைப் பார்த்துக் கொண்டிருப் பவர்களுக்குத் தகிப்பை ஏற்படுத்திற்று!'

டோனி மாரிசன்: டென்சில் வாஷிங்டனை 'பிலவட்'டில் நடிக்கக் கேட்டதாகவும் அதற்கு அவர், 'கறுப்பர்கள் சிறைச்சாலை வெள்ளை அதிகாரிகளுடன் வாய்வழிப் பாலுறவு கொள்ளும் படத்தில் என்னால் நடிக்க முடியாது' என்று கூறிவிட்டதாகவும் யாரோ சொன்னார்கள். அது ஏதோ வினோதமான செயல் என்று அவர் நினைத்துவிட்டார் போல! சோட் ரோஸ்மேரி பள்ளியில் 1960ஆம் வருஷத்திலிருந்து




பள்ளி மாணவர்களைத் தொடர்ந்து எல்லோரும் கற்பழித்தார்கள் என்பது சரித்திரம். டென்சில் ஏன் அப்படிக் கூறவேண்டும்? போகட்டும். என் கவலை எல்லாம் எப்படி இந்தக் காட்சிகளை அழகாக நெருக்கமாக எடுக்க முடியும் என்பது பற்றித்தான். அந்த செக்ஸ் காட்சியை அல்ல அதன் மூலம் ஏற்படும் தாக்கங்களைத்தான் மற்றவர்கள் உண்மையில் நினைத்துப் பார்க்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

மரியோ: உங்களின் அடுத்த புத்தகம் என்ன?

டோனி மாரிசன்: 'ஜஸ்டிஸ்' என்று பெயர் வைத்திருக்கிறேன். ஆனால், அது நீதி பரிபாலனம் பற்றியது அல்ல. ஒரு குடும்பமும் அதிலிருக்கும் அடிமை எஜமானன் பற்றியதுமான நாவல். அவன் பெயர் குட் மாஸ்டர். அவன் மற்ற அடிமைகளும் அதே பெயரை வைத்துக்கொள்ள வேண்டும் என்று நிர்பந்திக்கிறான். ஆனால், அவன் மிக மட்டமான மனிதன் என்று மற்றவர்கள் அவனை வெறுக்கிறார்கள். அந்தக் கூட்டத்தில் இரண்டு பெண்களுக்கும் ஒரு பையனுக்கும் தகப்பனாக இருப்பவன், தனது குழந்தைகளுக்கு கரேஜ், ஃப்ரீடம், ஜஸ்டிஸ் என்று பெயர் வைக்கிறான். ஆனால், பள்ளியில் கரேஜ் கேரி ஆகிறாள். ஃப்ரீடம் ப்ரீதா ஆகிறாள். ஜஸ்டிஸ் ஜூஸ் ஆகிறான். பெயர்கள் முக்கியம் என்று கருதும் எங்களுக்கு வேறு பெயர்கள் சூட்டப்படுகின்றன. அப்படிக் கூப்பிடப்படும் பெயர்களும் சரியானவையாக இருப்பதில்லை. உங்கள் பலகீனத்தைப் பெயராக மாற்றும் சித்திரவதை.

மரியோ: நீங்கள் உங்களை அமெரிக்க எழுத்தாளர் என்பதை விட ஆப்பிரிக்க அமெரிக்க எழுத்தாளர் என்று அழைக்கப்படுவதைத்தான் விரும்புவதாகக் கூறியிருக்கிறீர்களே!

டோனி மாரிசன்: அப்படியா?

மரியோ: ஆமாம்.

**டோனி மாரிசன்:** அமெரிக்கா? நான் என்னை இந்த நாட்டுடன் இணைத்துப் பார்க்க முடியாது என்றுதான் நினைக்கிறேன். எழுத்தாளர் எட்கர் டாக்டரோவ்வுடன் ஒரு நிகழ்ச்சியில் நான் பங்கு பெற்றேன். அவர்தான் என்னை அறிமுகப்படுத்த வேண்டும். அப்படிச் செய்யும் போது, 'டோனி ஒரு கறுப்பின எழுத்தாளர் என்று நான் நினைக்கவில்லை! அவர் ஒரு பெண் எழுத்தாளர் என்றும் நான் நினைக்கவில்லை! நான் நினைப்பது என்னவென்றால்.....' என்று நிறுத்தினார். நான் குறுக்கிட்டு, 'வெள்ளைக்கார ஆண் எழுத்தாளர்!' என்றேன். வந்திருந்தவர்கள் எல்லோரும் சிரித்தார்கள்.

எட்கர் டாக்டரோவ் என்னைச் சிறு வட்டத்துக்குள் அடைக்க விரும்பவில்லை. ஆனால், கறுப்பு இனம், பெண் இவற்றை விட்டால் வேறு என்ன இருக்கிறது? வெள்ளை மனிதர்கள்தான். டாக்டரோவ் என்னைப் பற்றிச் சொல்ல விரும்பியது நான் ஒரு எழுத்தாளர் என்பதையே. அதைத்தான் நான் என் அடையாளமாகப் பார்க்கிறேன்.

---

ஆகஸ்ட் 2019இல் தனது எண்பத்தெட்டாம் வயதில் காலமான டோனி மாரிசன் தலை சிறந்த அமெரிக்க நாவலாசிரியர், கட்டுரையாளர், பத்திரிகை ஆசிரியர். பிரின்ஸ்டன் பல்கலைக் கழகத்தின் கௌரவப் பேராசிரியர். உலகப் புகழ் பெற்ற ராண்டம் ஹவுஸ் பதிப்பகத்தில், ஆப்பிரிக்க அமெரிக்க இனத்தைச் சேர்ந்த முதல் ஆசிரியராகப் பதினேழு ஆண்டு காலம் பணியாற்றி மிகச் சிறந்த எழுத்தாளர்களை வெளியுலகத்தின் கவனத்துக்குக் கொண்டு வந்தவர். நோபல் பரிசு பெற்ற இலக்கியவாதி. 2017இல் கிராண்டா இதழில் வெளியான அவரது நேர்காணல் இது. ●

**ஸிந்துஜா <weenvy@gmail.com>**

# வேதரத்தினம் தொண்டும் தியாகமும்

**பாவண்ணன்**

காந்தியடிகள், 12.03.1930 அன்று உப்பு சத்தியாக்கிரகத்தைத் தொடங்கினார். சபர்மதி ஆசிரமத்திலிருந்து 79 தொண்டர்களுடன் புறப்பட்டு 240 மைல் தொலைவிலிருந்த தண்டி கடற்கரைக்குச் சென்று உப்பெடுக்கும் நோக்கத்துடன் அந்தப் பயணம் திட்டமிடப்பட்டது. இருபத்தி நான்கு நாட்கள் நீண்ட அந்தப் பயணத்தில் தங்குமிடங்களைத் தீர்மானித்து உரிய ஏற்பாடுகளைச் செய்தவர் வல்லபாய் பட்டேல்.

தேசம் முழுதும் இந்தப் போராட்டம் பரவ வேண்டும் என நினைத்த ராஜாஜி தமிழ்நிலத்தில் ஒரு சத்தியாகிரகத்தைத் திட்டமிட்டார். பல்வேறு நகரங்களிலிருந்து நூறு தொண்டர்கள் திரண்டு 13.04.1930 அன்று திருச்சியில் டாக்டர் தி.சே. சௌ. ராஜன் வீட்டிலிருந்து வேதாரண்யத்தை நோக்கிக் கிளம்பினார்கள். அவர்கள் வழிநெடுக சுகாதாரப்பணிகளை மேற்கொண்டபடியும் மதுவின் கொடுமைகளை விளக்கும் கூட்டங்களை நடத்திய படியும் தாழ்த்தப்பட்டோர் குடியிருப்புகளில் சமபந்தி போஜனம் செய்துகொண்டும் பிரார்த்தனைக் கூட்டங்கள் நடத்தியபடியும் தக்ளியில் நூல்நூற்ற படியும் சென்றார்கள். இந்த சத்தியாக்கிரகப் படைக்காகவே நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை, 'கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது' என ஒரு பாடலை எழுதிக் கொடுத்திருந்தார்.

அவர்களுக்கு தங்குமிடம் உட்பட எல்லா ஏற்பாடுகளையும் கருத்துடன் கவனித்துக் கொண்டவர் காந்தியரான வேதரத்தினம் பிள்ளை. அவருடைய நிர்வாகத்திறனை மெச்சி காந்திய நண்பர்கள் அவருக்கு அன்புடன் 'சர்தார்' என்னும் பட்டத்தை அளித்தனர். அனைவராலும் அவர் 'சர்தார் வேதரத்தினம் பிள்ளை' என்றே அழைக்கப்பட்டார்.

சத்தியாகிரகிகளின் ஊர்வலத்தைக் குலைக்கவேண்டும் என்கிற நோக்கத்துடன் தஞ்சாவூர் மாவட்டத்துக்கு மாஜிஸ்ட்ரேட்டாகப் பணிபுரிந்த ஜே.ஏ. தார்ன் என்னும் ஆங்கிலேய அதிகாரி பொதுமக்களுக்கு சொல்லொணா இடையூறுகளை அளித்தார். அவர்களுக்கு உணவு கொடுப்போருக்கும் தங்க வைப்போருக்கும் தண்டனை என அறிவிக்கப்பட்டது. தடையை மீறி உணவளித்த தற்காக திருத்துறைப்பூண்டி நகருக்கருகில் இருந்த தென்பாதி நாயுடு சத்திரத்தின் தர்மகர்த்தா கைது செய்யப்பட்டார்.

வேதரத்தினம் பிள்ளை ஊர்மக்களின் உதவியை நாடினார். தண்டனைக்கு அஞ்சினாலும் சத்தியாகிரகத் தொண்டர்கள் மீது பொதுமக்கள் பரிவு கொண்டிருந்தனர். வழியில் மரக்கிளைகளில் யாருமறியாதபடி சாப்பாட்டு பைகளைத் தொங்க வைத்து, தொண்டர்களே எடுத்து உண்ணும்படி செய்யத் தொடங்கினர்.

வேதரத்தினத்தின் மீது மிகுந்த மதிப்பு கொண்டவர் வைரப்பன் என்னும் நாவிதர். தேச பக்தியின் காரணமாகவும் சத்தியாகிரகிகளுக்கு காவலர்கள் இழைக்கும் கொடுமைகளைக் நேருறக் கண்டதாலும் காவல்துறையினருக்கு இனி முடி திருத்துதலோ முகம் மழித்தலோ செய்வதில்லை என முடிவெடுத்தார். ஒருநாள் அவரை ஏமாற்றும் விதமாக ஒரு காவலர் சாதாரண உடையில் வந்து முகம் மழித்துக்கொள்வதற்காக உட்கார்ந்துவிட்டார். விவரமறியாத வைரப்பனும் தன் வேலையைத் தொடங்கினார். பாதி வேலையை முடித்த தருணத்தில் அப்பக்கமாக தற்செயலாக வந்த வேறொரு காவலர் அவரைக் கண்டு நலம் விசாரிக்க நின்ற தருணத்தில் உண்மை வெளிப்பட்டுவிட்டது. நிறுத்திய வேலையைத் தொடர மறுத்தார் வைரப்பன். அரசு ஊழியரை அவமானப்படுத்திய குற்றத்துக்காக அவருக்கு ஆறுமாத சிறைத்தண்டனை விதிக்கப்பட்டது. இன்முகத்தோடு அதை ஏற்று சிறைசென்றார் வைரப்பன்.



எல்லாத் தடைகளையும் கடந்து 23.04.1930 அன்று வேதாரண்யத்தை அடைந்தது சத்தியாக்கிரகிகள் குழு. அவர்களுக்கு யாரும் இடமளிக்கக்கூடாது என்கிற தடை இருந்ததால் காலியாகக் கிடந்த ஒரு மனையை வாடகைக்கு எடுத்து அவசரமாக கீற்றுக்கொட்டகை போட்டு தங்குவதற்கான வசதியைச் செய்துகொடுத்தார் வேதரத்தினம். ஒரு வாரகாலம் அங்கேயே தங்கிய தொண்டர்கள் சுதந்திரப் பிரச்சாரத்தில் தொடர்ந்து ஈடுபட்டார்கள். 30.04.1930 அன்று அதிகாலையில் ராஜாஜியும் மூன்று தொண்டர்களும் மட்டும் அங்கிருந்து புறப்பட்டுச் சென்று அகஸ்தியம்பள்ளி என்னுமிடத்தில் உப்பெடுத்து கைதானார்கள். இப்படி ஒவ்வொரு நாளும் மூவராகவோ நால்வராகவோ சென்று உப்பெடுத்து தொடர்ந்து கைதானார்கள். வேதரத்தினத்துக்குச் சொந்தமான உப்பளங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. அவரும் கைதுசெய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார்.



வேதாரண்யம் உப்பு சத்தியாகிரக நிகழ்ச்சியின் வழியாக தமிழகமெங்கும் வேதரத்தினத்தின் புகழ் பரவியது. இச்சம்பவத்துக்கு வெகுகாலம் முன்பாக இளம்பருவத்திலிருந்தே வேதரத்தினம் பிள்ளை தேசபக்தி மிக்கவராக இருந்தார். இருபதுகளில் பெல்காம் நகரில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டுக்கு காந்தியடிகள் கலந்துகொள்ள இருப்பதை அறிந்த பல இளைஞர்கள் தமிழ்நாட்டிலிருந்து புறப்பட்டுச் சென்றார்கள். அவர்களில் ஒருவர் வேதரத்தினம் பிள்ளை. அங்குதான் அவர் முதன்முதலாக காந்தி யடிகளைப் பார்த்தார். அன்றைய கூட்டத்தில் காந்தியடிகள் சமுதாயத்தில் நிலவிவரும் தீண்டாமைக் கொடுமையை அகற்றவேண்டிய தேவையைக் குறித்து உரை நிகழ்த்தினார். பிறகு மாலையில் நடைபெற்ற அனைத்திந்திய மாணவர் மாநாட்டிலும் அதே கருத்தை அவர் வலியுறுத்தினார். மேலும், இராட்டையில் நூல்நூற்பதை ஒவ்வொரு மாணவரும் தம் கடமையாகக் கருதி செயலாற்ற வேண்டுமென்றும் கதராடைகள் அணிந்து முன்னுதாரணமாகத் திகழவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். கதர் என்பது யாரையும் வெறுப்பதன் அடையாளமாக அணியப்படுவதல்ல என்றும் அன்பின் அடையாளமாகவும் சொந்தக் காலில் நிற்கும் சுதந்திரத்தின் அடையாளமாகவும் அணியப்படும் ஆடையென்றும் அவர்களிடம்

எடுத்துரைத்தார்.

காந்தியடிகளின் சொற்கள் வேதரத்தினத்தின் நெஞ்சில் ஆழமாகப் பதிந்தன. அன்றுமுதல் காந்தியடிகள் காட்டிய பாதையில் நடக்கும் தொண்டராகவே அவர் மாறிவிட்டார். ஊருக்குத் திரும்பியபோது கதர் வேட்டியும் கதர்ச்சட்டையும் அணிந்த புதிய மனிதராகவந்தார். தன் மனைவிக்கும் கதர்ப்புடவைகள் வாங்கிவந்து அணிந்துகொள்ளும்படி செய்தார். சில நாட்களுக்குப் பிறகு தனியாகப் புறப்பட்டு காந்தியடிகளின் ஆசிரமத்துக்குச் சென்று சில நாட்கள் தங்கி அவரைச் சந்தித்து உரையாடிவிட்டுத் திரும்பினார். காந்தியடிகளின் எளிய வாழ்க்கையும் கனிந்த அன்பும் அவரை மிகவும் கவர்ந்தன. அன்றுமுதல் அவரைப்போல எளிய மக்களுக்காக செயல்படுவதையே தன் வாழ்க்கையின் நோக்கமாக வேதரத்தினம் பிள்ளை அமைத்துக்கொண்டார். இராட்டையில் நூல்நூற்பது அவருடைய தினசரிக் கடமைகளில் ஒன்றானது. தன்னைச் சுற்றி யிருப்பவர்களையும் நூல்நூற்கும்படியும் கதராடைகள் அணியும்படியும் செய்தார் வேதரத்தினம். அவர்கள் நூற்கும் நூலைப் பெற்றுக்கொள்ளவும் குறைந்த விலையில் கதராடைகளை விற்பனை செய்யவும் தம் ஊரிலேயே ஒரு கதர் மையம் உருவாகும் வகையில் வழிசெய்தார். தேசபக்தியை வெளிப்படுத்துவதோடு குறைந்தபட்ச வருமானமும் இருந்ததால் கிராமத்தில் வாழ்ந்த பலரும் ஆர்வத்துடன் இராட்டையில் நூல்நூற்கத் தொடங்கினார்கள்.

*1921*ஆம் ஆண்டில் காந்தியடிகள் மதுரைக்கு வந்திருந்தார். நகருக்கு வரும் வழியில் அக்கம்பக்கத்தில் இருந்த கிராமங்களில் இடுப்பில் வெறும் துண்டை மட்டும் அணிந்தபடி வேலைசெய்யும் உழவர்களின் துயரங்களைக் கண்டு வேதனையுற்றார். அவர்கள் முன்னிலையில் முழு ஆடை அணிந்த கோலத்தில் நிற்பதையே காந்தியடிகள் குற்றமாகக் கருதினார். அன்றிரவே அவர் இனிமேல் மிக எளிமையான முறையில் உழவர்களைப் போலவே உடுத்தவேண்டும் என முடிவெடுத்தார். மறுநாள் காலையில் சட்டையையும் தலைப்பாகையையும் களைந்துவிட்டு இடுப்பு வேட்டியோடும்மேலேபோர்த்திய துண்டோடும் மக்கள் முன்னிலையில் தோன்றி உரையாற்றினார். தன் ஆடை மாற்றத்துக்கான காரணத்தை அவர் அந்த மேடையிலேயே அறிவித்தார். அந்தச் செய்தி பத்திரிகைகளில் மறுநாளே வெளியாகி மக்களிடையே பரவியது. அதை இளைஞரான வேதரத்தினமும் படித்தார். கதரும் எளிமையும் மட்டும் போதாது, கருணையும் மனிதனை உயர்த்துவதாக இருக்கவேண்டும் என்னும் உண்மையை உணர்ந்துகொண்டார். அன்றுமுதல் அவரும் சட்டை அணிவதைத் துறந்து உடலை மறைக்கத் தேவையான ஒரு கதர்த்துண்டையும் வேட்டியையும் மட்டுமே அணியத் தொடங்கினார். காந்தியைப் போலவே வாழ்நாள் முழுதும் அந்தக் கோலத்திலேயே வாழ்ந்தார்.

இளைஞர் வேதரத்தினம் தஞ்சாவூர் மாவட்டம் முழுதும் பயணம் செய்து காந்தியக் கொள்கைகளைப் பரப்புவதில் மும்முரமாக ஈடுபட்டார். பல தலைவர்களை வெளியூர்களிலிருந்து அழைத்துவந்து பேச வைத்தார். அவருடைய முயற்சியால் ஒருமுறை ராஜேந்திர பிரசாத் வந்து தேசப்பற்றை ஊட்டும் வகையில் மக்களிடம் பேசிவிட்டுச் சென்றார். மக்களிடையேயும் இயக்கத்திலும் அவருடைய செல்வாக்கு கொஞ்சம் கொஞ்சமாகப் பெருகியது. அதே நேரத்தில் அவரைப் பிடிக்காதவர்கள் அவர்மீது கொண்டிருந்த பொறாமையும் வளர்ந்தது. எனினும், அதைப்பற்றி சிறிதும் கவலையின்றி தன் கடமையில் ஈடுபட்டிருந்தார் வேதரத்தினம்.

ஒருமுறை தனது சொந்த ஊரான வேதாரண்யத்தில் ஒரு பெரிய மாநாடு நடத்தவேண்டும் என அவர் விரும்பினார். அந்த நிகழ்ச்சிக்கு இடம் கொடுப்பதாக தொடக்கத்தில் வாக்குறுதியளித்தவர் திடுமென மறுத்துவிட்டார். அதனால் தனக்குச் சொந்தமான நிலத்தைச் சரிப்படுத்தி பந்தல் போட வைத்தார் வேதரத்தினம். எப்படியாவது காந்தியடிகளை அக்கூட்டத்துக்கு அழைத்துக்கொண்டு வரவேண்டுமென விரும்பி, அப்போது கல்கத்தாவில் தங்கி யிருந்த காந்தியடிகளைச் சந்திக்கச் சென்றார். தன் வேலைச் சுமையைப் பற்றி விரிவாகச் சொல்லி தன் இயலாமையைப் புரிந்துகொள்ளும்படி கேட்டுக்கொண்டார் காந்தியடிகள். சற்றே மனம் சோர்வுற்றாலும் தளர்ந்துவிடாத வேதரத்தினம் அப்போது பர்தோலி போராட்டத்தை வெற்றிகரமாக நடத்தியிருந்த வல்லபாய் படேலை அவருக்குப் பதிலாக அனுப்பிவைக்கும்படி கேட்டுக்கொண்டார். அதற்கும் காந்தியடிகள் தயங்கினார். ஆனால், படேல் இல்லாமல் தான் அங்கிருந்து புறப்படமுடியாது என வேதரத்தினம் உறுதியாகத் தெரிவித்தார். "என்னிடமே சத்தியாக்கிரகமா?" என்று புன்னகைத்த காந்தியடிகள் ஒருவழியாக படேலை அனுப்பிவைக்க ஒப்புக்கொண்டார். அவருடன் மகாதேவதேசாயையும் நிகழ்ச்சிக்கு அனுப்பி வைத்தார். நிகழ்ச்சி மிகச்சிறப்பாக நடைபெற்றது.

பழைய குளங்களை ஆழப்படுத்துதல், சாலைகளைச் சரிசெய்தல், கள்ளுண்ணாமையைப் பற்றியும் சுகாதாரத்தின் அவசியத்தைப் பற்றியும் எடுத்துரைத்தல், தாழ்த்தப்பட்டோர் மேம்பாடு என எல்லாவிதமான செயல்களிலும் வேதரத்தினம் ஈடுபட்டு உழைத்தார். ஒருமுறை திருத்துறைப்பூண்டியில் வேதரத்தினமே கள்ளுக்கடையின் முன்னால் நின்று ஒருவார காலமாக தொடர்ந்து கள்ளுண்ண வேண்டாம் என மக்களிடம் பிரச்சாரம் செய்துகொண்டிருந்தார். அதைக் கண்டு வெகுண்டெழுந்த கள்ளுக்கடைக்காரர் கள்ளுப் பானையை எடுத்துவந்து யாரும் எதிர்பாராத தருணத்தில் வேதரத்தினத்தின் தலையில் போட்டு உடைத்தார். மேலும், வாய் நிறைய அடக்கி வைத்திருந்த வெற்றிலை பாக்கு எச்சிலை அவர்மீது ஆத்திரத்துடன் உமிழ்ந்தார். அனைத்து அவமரியாதைகளையும் புன்னகையோடு ஏற்றுக்கொண்ட வேதரத்தினம் கள் விற்கவேண்டாம் என மீண்டும் மீண்டும் மன்றாடிக் கேட்டுக்கொண்டார்.

தாழ்த்தப்பட்டோர் மேம்பாட்டுக்காக வேதரத்தினம் நிர்மாண ஊழியர் முகாம்களை ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு ஊரில் நடத்திவந்தார். தேர்ந்தெடுக்கப்பட்ட ஐம்பது அல்லது நூறு ஊழியர்களோடு காலை நாலரை மணிக்கெல்லாம் புறப்பட்டு சேரிப் பகுதிகளுக்குச் செல்வார். முதலில் அங்கங்கே சிதறிக்



ராஜாஜி தலைமையில் உப்பு சத்தியாகிரகம் யாத்திரை

கிடக்கும் குப்பை கூளங்களை அகற்றி தொலைவான இடத்துக்குக் கொண்டுசென்று குழிவெட்டிப் போட்டு மூடப்படும். பிறகு சாக்கடைகளைத் திருத்தி வழிந்து பரவாதபடி செய்யப்படும். அனைவரையும் ஒன்றுகூட்டி தூய்மை பற்றியும் கல்வியின் அவசியம் பற்றியும் விரிவாக எடுத்துரைக்கப்படும். பிறகு அங்கேயே யாரேனும் ஒருவருடைய வீட்டில் சமைக்கச் செய்து அனைவரும் ஒன்றிணைந்து உணவு உண்பார்கள்.

வேதரத்தினம் தன் தனிப்பட்ட முயற்சியின் விளைவாக திருத்துறைப்பூண்டி வட்டாரத்தில் ஏராள மான ஊர்களில் நிலாச்சுவான்தார்களிடமிருந்து பல மனைகளையும் நிலங்களையும் பெற்று அவற்றை தாழ்த்தப்பட்டோர்களுக்கு வழங்கினார். ஒருமுறை கடும்புயலில் சிக்கி வேதாரண்யத்துக்கு அருகிலிருந்த வடகட்டளை என்னும் ஊரில் எண்ணற்ற தாழ்த்தப் பட்டோர் வீடுவாசல்களை இழந்து தவித்தார்கள். உடனே வேதரத்தினம் சென்னையில் உள்ள இராமகிருஷ்ண மடத்துடன் தொடர்புகொண்டு அவர்களுடைய உதவியால் இருநூறு வீடுகள் கொண்ட இராமகிருஷ்ணாபுரம் என்னும் குடியிருப்பையே உருவாக்கி அளிக்கும்படி செய்தார்.

வேதாரண்யம் உப்பு சத்தியாகிரகத்தில் வேத ரத்தினத்துடன் கலந்துகொண்டவர்களில் ஒருவர் தலையூரைச் சேர்ந்த நாராயணசாமி ஐயர். வேதரத்தினத்தைப் போலவே காந்தியடிகள் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டவர். சுதந்திரப் போராட்டங்களில் ஈடுபட்டு பலமுறை சிறைக்குச் சென்றவர். தாழ்த்தப் பட்டோருக்கான சேவையே தலையான சேவை என்னும் காந்தியடிகளின் சொற்களை ஏற்று தனக்குச் சொந்தமாக இருந்த ஒவ்வொரு நிலத்தையும் விற்று தாழ்த்தப்பட்டோர்மேம்பாட்டுக்காகசெலவுசெய்தார் அவர். இறுதியில் அவர் குடியிருந்த வீடு ஒன்றுதான் எஞ்சியது. அதையும் விற்று அந்தப் பணத்தையும் தாழ்த்தப்பட்டோர் சேவை நிதிக்கு அளித்தார். பொருளனைத்தையும் இழந்ததால் வயது முதிர்ந்த காலத்தில் கடுமையான வறுமையில் வாடினார்.

அவருக்கு கமலா, சாரதா என இரு பெண்கள் இருந்தனர். 1945ஆம் ஆண்டில் ஒருநாள் அவர்களை அழைத்துக்கொண்டு வந்து வேதரத்தினத்தைச் சந்தித்தார். தம் இறுதிக்காலம் நெருங்கிவிட்டதாகவும் தம் இரு மகள்களையும் அவரிடம் ஒப்படைப்பதாகவும் இனி அவரே அவர்களுக்கு தாயும் தந்தையுமாக இருந்து காப்பாற்ற வேண்டுமென கேட்டுக்கொண்டார். அக்கணமே அவர்கள் மூவருக்கும் வசிக்க இடமளித்து ஆதரவு நல்கினார் வேதரத்தினம்.

காந்தியடிகளின் நிர்மாணத் திட்டங்களில் ஒன்றான ஆதாரக்கல்வித் திட்டத்தைப் பரவலாக்கும் முயற்சிகள் தேசமெங்கும் நடைபெற்ற நேரம் அது. அதன் அடிப் படையில் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் ஓர் ஆதாரப் பயிற்சிப் பள்ளி தொடங்கப்பட்டது. பெண்களுக்கான ஆசிரியைப் பயிற்சி அங்கு வழங்கப் பட்டது. கமலாவையும் சாரதாவையும் அப்பள்ளியில் உடனடியாகச் சேர்த்துவிட்டார் வேதரத்தினம். இவர் களோடு இருபத்தியாறு பெண்கள் அப்பள்ளியில் பயிற்சி பெற்றனர். பயிற்சி முடிந்ததும் அவர்கள் அனைவருக்கும் காந்தியடிகளே வந்திருந்து சான்றிதழ் வழங்கி ஆசியளித்தார்.

கமலாவிடமும் சாரதாவிடமும், "அடுத்து என்ன செய்ய நினைக்கிறீர்கள்?" என்று கேட்டார் வேதரத்தினம். அவர்கள் சிறிதும் தயங்காமல், "நீங்களே ஓர் ஆதாரப்பள்ளியைத்தொடங்குங்கள். நாங்கள் அங்கு பணிபுரிகிறோம்" என்று பதில் சொன்னார்கள். அதைக் கேட்டு, இருபதாண்டுகளுக்கு முன்பு சேரன்மாதேவி குருகுலத்தைப் பார்வையிட்டபோது அதேபோல ஒரு குருகுலத்தைத் தொடங்கி நடத்தவேண்டும் என எழுந்த விருப்பம் மீண்டும் வேதரத்தினத்தின் நெஞ் சில் துளிர்விட்டது. இதன் விளைவாக இரண்டு ஓலைக் குடில்களுடன் அந்த ஆண்டிலேயே கஸ்தூர்பா ஆதாரப்பள்ளி உருவானது. கமலாவும் சாரதாவும் அங்கு ஆசிரியைகளாக பணிபுரிந்தனர், அக்கம்பக்கத்தில் இருந்த தாழ்த்தப்பட்டோர் குடியிருப்புகளுக்குச் சென்று சிறுவர் சிறுமியரை அழைத்துவந்து பள்ளியில் சேர்த்து படிக்க வைத்தனர்.

குருகுலத்துக்கான செலவு கொஞ்சம்கொஞ் சமாக அதிகரித்தபடியே இருந்தது. தொடக்கத்தில் தன் கையிருப்புத் தொகையையெல்லாம் எடுத்துச் செலவு செய்தார் வேதரத்தினம். தமக்குச் சொந்தமான நிலத்தில் விளையும் நெல்லையும் தானியங்களையும் குருகுலத்துக்கே அளிக்கத் தொடங்கினார். செலவு மேலும் கூடியபோது நெருங்கிய நண்பர்களிடமிருந்து ஓரளவு நன்கொடையைப் பெற்று சமாளித்தார். கஸ்தூர்பா காந்தி நிதி டிரஸ்டின் உதவியை நாடுமாறு நண்பர்கள் வேதரத்தினத்துக்கு ஆலோசனை வழங்கினார்கள். வேறு வழியின்றி கஸ்தூர்பா ஆதாரப் பள்ளிக்கு உதவுமாறு காந்தியடிகளுக்குக் கடிதம் எழுதினார் அவர்.

"பள்ளிக்கூடம் இயங்கும் வேதாரண்யத்தில் தந்தி அலுவலகம் இருக்கிறது. இரண்டாயிரத்துக்கும்

அதிகமான மக்கள் தொகையைக் கொண்ட ஊரில்தான் தந்தி அலுவலகம் அமைக்கப்பட்டிருக்கும். அதன் அடிப்படையில் வேதாரண்யத்தை கிராமமாகக் கருத வழியில்லை. கிராமத்தில் இல்லாத பள்ளிக்கு கஸ்தூர்பா நிதியிலிருந்து பண உதவி அளிக்கமுடியாத நிலையில் இருக்கிறோம்" என்று காந்தியடிகளிடமிருந்து பதில் வந்தது. அடுத்து என்ன செய்வது என்று தெரியாமல் குழம்பிய வேதரத்தினத்துக்கு, சுதேசா கிருப்பளானி, பள்ளியை வேதாரண்யத்துக்கு வெளியே ஒரு கிராமத்துக்கு மாற்றும்படி ஒரு யோசனையை வழங்கினார்.

வேதாரண்யத்தை அடுத்த மகாராஜபுரம் என்னும் கிராமத்தில் வேதரத்தினத்துக்குச் சொந்தமான ஒரு நிலம் இருந்தது. நிர்மாண ஊழியர்கள் முகாமுக்காக அந்நிலத்தில் போடப்பட்டிருந்த கீற்றுக் கொட்டகைகள் கூட பிரிக்கப்படாமல் அப்படியே இருந்தன. சுதேசா கிருப்பளானியின் யோசனையின்படி ஆதாரப் பள்ளியை அக்குடில்களுக்கு உடனடியாக மாற்றினார் வேதரத்தினம்.

ஆதாரப்பள்ளியில் ஆண் குழந்தைகளும் பெண் குழந்தைகளும் சேர்ந்தே படித்துவந்தனர். பள்ளிக்கூடம் இருக்கும் இடத்துக்கே விதிகளைச் சுட்டிக்காட்டிய காந்தியடிகள் நாளைக்கு, "இது பெண் குழந்தைகள் படிக்கும் பள்ளியல்ல, ஆண் குழந்தைகளும் இருக்கிறார்களே" என வேறொரு விதியைச் சுட்டிக்காட்டிவிட இடமளித்துவிடக்கூடாது என்ற முன்னெச்சரிக்கையோடு செயல்பட்டார், வேதரத்தினம். பெண் குழந்தைகளையும் ஆசிரியை களையும் மட்டும் புதிய இடத்துக்கு மாற்றி 'கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம்' என்றும், பழைய பள்ளிக்கு 'தாயுமானவர் வித்யாலயம்' என்றும் பெயர் சூட்டினார். நல்ல வேளையாக இந்த மாற்றங்களைச் செய்தபிறகு காந்தியடிகளிடமிருந்து எந்த மறுப்பும் எழவில்லை. குருகுலம் இயங்கத் தேவையான நிதி உதவியும் கிடைத்தது.

தொடக்கப் பள்ளியாக இருந்த குருகுலம் மெல்ல மெல்ல உயர்நிலைப் பள்ளியாக வளர்ச்சியடைந்தது. எல்லோருக்கும் உணவும் உடையும் உறைவிடமும் கொடுத்து ஆதரவோடு அணைத்துக்கொண்டது குருகுலம். புயல் சீற்றத்திலிருந்து பாதுகாக்கும் பொருட்டு ஒவ்வொரு குடிலையும் கட்டடமாக மாற்றினார் வேதரத்தினம்.

கைக்குத்தல் அரிசித் திட்டம் வேதரத்தினத்தின் மனத்தில் உதித்த ஒரு புதுமையான திட்டம். சத்தான உணவுக்கு வழிவகுப்பதோடு மட்டுமன்றி அந்த ஊரில் உழைக்கும் பெண்களின் நல்வாழ்வுக்கும் அந்தத் திட்டம் உதவியது. தொடக்கத்தில் நாற்பதுகள் வரையில் ரங்கூனிலிருந்து கப்பலில் வந்து இறங்கிய அரிசியே தமிழ்நாட்டுக் கடைகளில் விற்கப்பட்டது. 1941ஆம் ஆண்டில் அமெரிக்காவுக்குச் சொந்தமான ஹவாய் தீவிலுள்ள பேர்ள் ஹார்பர் என்னும் துறைமுகத்தின் மீது ஜப்பான் குண்டு வீசித் தாக்கியது. அதைத் தொடர்ந்து அமெரிக்காவும் ரஷ்யாவும் இங்கிலாந்தும் ஜப்பான் மீது போர் தொடங்குவதாக அறிவித்தது. பர்மா, ஜப்பான் வசமானதால் இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் இடையிலான கப்பல் போக்குவரத்து துண்டிக்கப்பட்டது. அதுவரை இறக்குமதி செய்யப்பட்ட அரிசி போக்குவரத்து அடியோடு நிறுத்தப்பட்டது. இதனால் எங்கெங்கும் அரிசிப்பஞ்சம் ஏற்பட்டது. இந்தச் சூழ்நிலையை தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்ட வணிகர்கள் பலமடங்கு விலையை உயர்த்தி தம்மிடம் உள்ள அரிசியை விற்கத் தொடங்கினார்கள்.

இதைக் கண்டு வருந்திய வேதரத்தினம் தலைஞாயிறு பகுதிக்குச் சென்று வணிகர்களிடமிருந்து நெல்மூட்டைகளை வாங்கி படகு வழியாக வேதாரண்யத்துக்கு கொண்டுவந்து சேர்த்தார். நெல்குத்தும் வேலையில் உழைக்கும் பெண்களை ஈடுபடுத்தி அவர்களுக்கும் வருமானத்துக்கு ஒரு வழியை ஏற்படுத்திக் கொடுத்தார். கைக்குத்தல் அரிசியை ஊர்முழுக்க அடக்கவிலைக்கே விற்றார். தம்மிடம் உள்ள அரிசியை அதிக லாபத்துக்கு விற்க முடியாத கோபத்தில் வேதரத்தினம் மீது வியாபாரிகள் சீற்றமுற்றனர். அரசாங்கத்திடம் புகாரளிக்க முயற்சி செய்தனர். உடனே, 'வேதாரண்யம் கைக்குத்தல் அரிசித் தொழிலாளர்கள் சங்கம்' என்றொரு அமைப்பை ஏற்படுத்தி, அந்த அமைப்பிடம் கொள்முதல் பொறுப்பையும் விற்பனைப் பொறுப்பையும் ஒப்படைத்தார், வேதரத்தினம்.

பொதுவாழ்க்கையிலும் வணிக வாழ்க்கையிலும் அவரை வெறுக்கும் எதிரிகள் கண்மறைவில் வளர்ந்துகொண்டே இருந்தனர். *30.01.1948* அன்று தில்லியில் பிரார்த்தனைக் கூட்டத்துக்குச் செல்லும் வழியில் காந்தியடிகள் சுடப்பட்டு மரணமடைந்தார். பல இடங்களில் வன்முறை வெடித்தது. எங்கெங்கும் மக்கள் ஆத்திரவசப்பட்டு கொதித்துக் கொண்டிருந்தார்கள். இத்தருணத்தைப் பயன்படுத்தி வேதரத்தினத்தைக் கொல்ல திட்டமிட்டனர் அவருடைய எதிரிகள். ஓர் ஆளைப் பிடித்து, அவனுக்கு ஒரு துப்பாக்கியும் பணமும் கொடுத்து, எப்படி எங்கே அந்தக் கொலையை நிகழ்த்துவது என்கிற பயிற்சியையும் அளித்தனர்.

காந்தியடிகள் மறைந்து பத்து நாட்களுக்குப் பிறகு அவருடைய அஸ்தியை நாடெங்கும் கரைத்தார்கள். அன்றைய தினம் வேதாரண்யத்தில் காந்தியடிகளுக்காக ஓர் இரங்கல் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது. அக்கூட்டத்தில் வேதரத்தினம் உரையாற்றும்போது அவரைக் கொல்லவேண்டும் என்பது திட்டம். அனைவரும் எதிர்பார்த்தபடி வேதரத்தினம் பேசத் தொடங்கினார். அவருக்கு அருகிலேயே அவரைக் கொல்ல வந்தவரும் அமர்ந்திருந்தார். காந்தியடிகள் சுடப்பட்ட செய்தியை அறிந்ததிலிருந்து துயரே உருவாக நடமாடிக் கொண்டிருந்தார் வேதரத்தினம். தன் வாழ்க்கையை தகவமைத்த அந்த மாபெரும் மனிதரின் இழப்பை அவரால் தாங்கிக்கொள்ளவே இயலவில்லை. மேடையில் பேசத் தொடங்கியதும் அவர் விழிகளிலிருந்து கண்ணீர் பெருகி வழிந்தது. கேட்டவர்களை எல்லாம் அந்தப் பேச்சு உருக்கியது. திடலில் கூடியிருந்த அனைவரும் கண்கலங்கினார்கள்.

அவரைக் கொல்ல வந்தவனையும் வேத


வேதரத்தினம்

ரத்தினத்தின் உரை நெகிழ வைத்துவிட்டது. தாம் அவரைக் கொல்ல வந்திருக்கிறோம் என்பதே அவருக்கு மறந்துவிட்டது. புதியதொரு மனிதனாகவே அவர் மாறிவிட்டார். துப்பாக்கியிடம் அவர் கை போகவே இல்லை. இரங்கல் கூட்டம் முடிந்ததும் அவர் தன் வீட்டுக்குச் சென்று வேதரத்தினத்துக்கு நீண்டதொரு கடிதத்தை எழுதினார். அதையே மீண்டும் பிரதியெடுத்து முதலமைச்சராக இருந்த ஓமந்தூர் இராமசாமி ரெட்டியாருக்கு அனுப்பிவைத்தார். அக்கடிதத்தின் இறுதிப் பகுதியில், "அவரைக் கொல்ல என்னை அனுப்பியவர்கள் அவரைக் கொல்லவேண்டும் என்பதில் மிகவும் உறுதியாக இருக்கிறார்கள். அவருக்கு தகுந்த பாதுகாப்பளித்து காப்பாற்ற வேண்டியது அரசின் கடமை" என்று கூடுதலாக இரண்டு வரிகளையும் எழுதி அனுப்பிவைத்தார்.

மறுநாள் காலை வேதரத்தினம் கடிதத்தைப் படித்து விஷயத்தைத் தெரிந்துகொண்டார். ஆனாலும், யாரிடமும் இதைப்பற்றித் தெரிவிக்கவில்லை. ஆனால், தனக்கு வந்த கடிதத்தைப் படித்த முதலமைச்சர் பதற்றத்தோடு உடனடியாக ஒரு மெய்க்காப்பாளரை நியமித்து அவரிடம் அனுப்பி வைத்தார். அவர் வந்து சேர்ந்த பிறகுதான் மற்றவர்களுக்கு விஷயம் புரிந்தது. மெய்க்காவலர் எப்போதும் துணைக்கு வருவதை அவர் விரும்பவில்லை. என்றாலும், தன்னோடு இருந்தவர்களின் அன்புக் கட்டளைக்குக் கட்டுப்பட்டு அந்த ஏற்பாட்டுக்கு உடன்பட்டார்.

அடுத்த ஆண்டில் மன்னார்குடிக்கு அருகில் இருக்கும் தெற்கு நாணலூரில் ஒரு கூட்டத்தில் கலந்துகொண்டு உரை நிகழ்த்திவிட்டு இரவில் திரும்பிவரும் வேளையில் ஒரு பெரிய கூட்டம் அவருடைய வாகனத்தை வழிமறித்து நிறுத்தியது. கூட்டம் வாகனத்தின் விளக்கை உடைத்து சுக்கு நூறாக்கிவிட எங்கும் இருள் சூழ்ந்தது. மெய்க்காப்பாளர் தன்னிடமிருந்த துப்பாக்கியை எடுத்தபோது வேதரத்தினம் அவரைத் தடுத்து நிறுத்தினார். மறுகணமே கதவைத் திறந்துகொண்டு தலையில் துண்டு போட்டுக்கொண்டு கூட்டத்திடையில் புகுந்து பக்கத்தில் இருந்த காட்டுக்குள் புகுந்துவிட்டார். கலவரத்தின் சத்தத்தைக் கேட்டு ஓடிவந்த அடுத்த ஊர்மக்கள் வந்து அவரைக் காப்பாற்றினார்கள். அவர் வந்த வாகனம் வாய்க்காலோரம் உருட்டிவிடப்பட்டு சேதப்படுத்தப்பட்டது. அவர் புகார் அளிக்காதபோதும் காவல்துறையினரே முன்வந்து வழக்கு பதிந்து விசாரணை நிகழ்த்தினர். தன்னைக் கொல்லவந்தவர்கள் யாரென தெரிந்தபோதும் வேதரத்தினம் யாரையும் இறுதிவரைக்கும் காட்டிக்கொடுக்க விரும்பவில்லை. இருட்டில் யார் முகமும் சரியாகத் தெரியவில்லை என்று பொதுவாகச் சொல்லி வெளியேறிவிட்டார்.

பொதுவாக, கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலத்தின் பிரார்த்தனை உரைகள் கேள்விபதில் நிகழ்ச்சிகளாகவே அமையும். பிள்ளைகளிடையே புதிய சிந்தனை தோன்ற இந்த வழிமுறை பெரிதும் உதவும் என அவர் நம்பினார். ஒருமுறை குருகுலத்தின் பிரார்த்தனை கூட்டத்தில் சுதந்திரப் போராட்டத்தைப் பற்றி அவர் உரைநிகழ்த்தினார். அதைத்தொடர்ந்து பிள்ளைகளைப் பார்த்து, "காந்தியடிகளுக்கு முன்னால் தோன்றிய நம் தலைவர்கள் ஏன் அகிம்சையைக் கடைபிடிக்கவில்லை?" என்றொரு கேள்வியைக் கேட்டார். வழக்கமாக மனதில் பட்ட ஏதேனும் ஒரு பதிலைச் சொல்லும் பிள்ளைகள் அன்று பதில்சொல்லத் தடுமாறினார்கள். அதைக் கண்டதும் வேதரத்தினமே கேள்விக்குரிய பதிலையும் சொன்னார்.

"அகிம்சையின் வழியில் வெற்றிபெற முடியும் என்பது அவருக்கு முன்னால் வாழ்ந்த தலைவர்களுக்குத் தெரியவில்லை என்பதுதான் காரணம். அவர்களுக்கு அகிம்சையின் வலிமையை எடுத்துரைக்க ஒரு காந்தி அப்போது வாழவில்லை. அவர்களுக்குத் தெரிந்ததெல்லாம் எதிர்க்க வேண்டும் என்கிற ஒரே விஷயம்தான். எதிர்ப்பை வன்முறையின் வழியாகத்தான் காட்டமுடியும் என்பதால் அவர்கள் வன்முறையில் ஈடுபட்டார்கள். மற்றவர்கள் யாருக்கும் தோன்றாத அகிம்சை முறை காந்தியடிகளுக்கு மட்டுமே தோன்றியது."

அகிம்சையும் உண்மையும் காந்தியடிகள் தன் ஆயுள் முழுதும் வலியுறுத்திய இரண்டு விஷயங்கள். ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்க முடியாதபடி அவ்விரண்டும் எப்போதும் இணைந்தே நிற்கின்றன, ஒரே நாணயத்தின் இரு பக்கங்களைப்போல. இன்னொரு கோணத்தில் அகிம்சை என்னும் வழியாகச் சென்று அடைய வேண்டிய புள்ளியே உண்மை என்று சொல்லலாம். அகிம்சையைக் கடைபிடிப்பவர்கள் சாதி மத வேறுபாடுகளை எளிதில் கடந்துசெல்லமுடியும் என்பது காந்தியடிகள் அடிக்கடி சொல்லும் கூற்று. அத்தகையோரிடம் காணப்படும் தொண்டுள்ளம் மகத்தான சேவையை ஆற்றும் வலிமை பொருந்தியது. காந்தியடிகளிடம் அத்தகைய தொண்டுள்ளத்தை வேதரத்தினம் கண்டடைந்தார். நாம் அதை வேதரத்தினத்தின் வாழ்க்கையில் காணமுடிகிறது. ●

பாவண்ணன் <paavannan@hotmail.com>

# டிஜிட்டல் யுகத்தின் மனுநீதி ஆயுதங்கள் ஆண் படைக்கும் மாயப் பிசாசங்கள்

**மாலதி மைத்ரி ஓவியம்: Bhuli**

### கருப்பு வெள்ளை யுகம்

பெண் மக்களை இன்று ஆண்கள் நடத்தும் மாதிரியானது, மேல் சாதிக்காரன் கீழ் சாதிக்காரனை நடத்துவதைவிட, பணக்காரன் ஏழையை நடத்துவதைவிட, எஜமான் அடிமையை நடத்துவதைவிட மோசமானதாகும். அவர்கள் எல்லாம் இருவருக்கும் சம்பந்த மேற்படும் சமயங்களில் மாத்திரந்தான் தாழ்மையாய் நடத்துகிறார்கள். ஆனால், ஆண்களோ பெண்களை பிறவி முதல் சாவு வரை அடிமையாயும் கொடுமையாயும் நடத்துகின்றார்கள். நாம் எல்லோரும் அடிமை வயிற்றில் பிறந்து அடிமைகளாய் வளர்க்கப்பட்டோம் என்பதை மறுக்கின்றீர்களா? - பெரியார் (குடியரசு, 8.2.1931)

பெண் என்பவள் ஆணின் சொத்து, பெண்கள் குடும்பம் - சாதி - மதத்தின் உடைமைப் பொருள்கள் என்னும் ஆயிரமாண்டு மதக் கருத்துரு வாக்கங்களையும், வர்ணாசிரமத்தை அடிப்படையாகக் கொண்ட சாதிய சனாதன இழிவுகளையும் இதிகாசப் பொய்களையும் புலப்படுத்தி, பெண்கள் மீதான பிற்போக்கு அதிகாரத்தைத் தகர்க்க நடந்த போராட்டம் மிகப்பெரியது. அம்பேத்கர் சமத்துவம் சமூகநீதிக்கான இயக்கம் கண்டு, அதற்கான சட்டங்கள் இயற்றும் நடவடிக்கைகளை மேற்கொண்டார். சுயமரியாதை இயக்கமும் திராவிட வீராங்கனைகளும் களத்தில் சமர் நடத்தினர். இவர்கள் நடத்திய பெரும் போராட்டங்களும் உலக அளவிலான பெண்ணுரிமைப் போராட்டங்களும் இணைந்து உருவாக்கிய அடிப்படை உரிமை களுடன் வாழும் தலைமுறைகள் நாம்.



பெரியாரியம் சமூகத்திலும் அறிவிலும் தாக்கத்தை ஏற்படுத்தி சில மாற்றங்கள் உருவாகத் தொடங்கிய அதே காலகட்டத்தில் கலை, இலக்கியம், சினிமா அனைத்தும் வர்ணாசிரம இந்துத்துவ ஆதிக்கத்தை பண்பாடு என்ற பெயரில் மறு உற்பத்தி செய்து பக்தி, வழிபாடு, சடங்குகள், சம்பிரதாயங்களை அழகியல் என்ற பெயரில் பெருக்கத் தொடங்கின. திராவிட அரசியலைப் பேசிய திரைப்படங்களோ பெண்ணடிமைச் சிந்தனையை வேறு வடிவில் மீண்டும் படைத்துக்கொண்டிருந்தன.

திராவிடக் கருத்தியலின் திரைவடிவம் எனக் கொண்டாடப்படும் ‘பராசக்தி’ கூட பெண்ணை நேர் எதிரான இரண்டே வகையில் அடக்கும் ஆண் பொதுக்கருத்தியலை முற்போக்கு என நிறுவியது. பெண் என்பவள் ஆண்களை மயக்கி குலங்கெடுக்கும் அழிவு சக்தி என ஒரு கதாப்பாத்திரத்தை முன்வைத்துச் சொன்னது. பெண்களுக்கு குடும்பத்து ஆண்கள் வளமான வாழ்வை அமைத்துத் தராமல் போனால், அந்த அபலைகள் திக்கற்று வீதியில் அலைய நேரும், ஆபத்துக்களில் சிக்கி பாலியல் பலாத்காரத்துக்கு ஆட்படும் நிலை வரும், பெண்களுக்கு காலாகாலத்தில் முறையாகத் திருமணம் செய்துகொடுத்து வாழ்வளிப்பது குடும்பத்து ஆண்களின் கடமை, ஏனெனில் பெண்கள் பலவீனமானவர்கள். இதனை இன்னொரு அபலைக் கதாப்பாத்திரத்தை முன்நிறுத்திச் சொன்னது.

பெண்களை இரண்டு முரண்பட்ட பாத்திரங்களாக மட்டுமே உருவகித்துக் காட்டுவதும் குணசேகரன்கள் தாசிகளை நாடிச் செல்லும் ஆண் ‘உயர்பிறப்பை’ அறத்தைக் காட்டி பாடம் நடத்துவதும் திராவிட அரசியலின் கருத்தியலாக இருக்க முடியுமா? பெரியாரியத்திற்கு முற்றிலும் எதிர்த்திசையில் இயங்கும் அபலைப் பெண் என்ற கருத்தாக்கம் இது. ஆண்களின் கருணையிலும் இரக்கத்திலும் வாழும் பெண் பற்றிய கருத்தியலையே பெண் விடுதலை எனப் பேசும் போக்கு பெருக இந்தப் பார்வை அடித்தளமாக அமைந்ததுள்ளது.

நவீன மின்னணுவியல் யுகத்தில் பெண் ஒடுக்குதல் பல புதிய வடிவங்களைப் பெற்றுள்ளது. பெருகிவரும் ஆணவக் கொலைகளுக்குத் தமிழர்கள் உருவாக்கி வளர்த்த பிற்போக்கு கலை இலக்கியம் பெரும் உளவியல் தூண்டுதலாக அமைந்துள்ளது.



'பெண்கள் முன்னேறிவிட்டார்கள், விரும்பிய கல்வி கற்கிறார்கள், விரும்பிய வேலைக்குச் செல்கிறார்கள், எழுதுகிறார்கள், பாடுகிறார்கள், ஆடுகிறார்கள், விளையாடுகிறார்கள், இயந்திரங்களை இயக்குகிறார்கள், நவீனத் தொழில் நுட்பத்தைக் கையாள்கிறார்கள், அரசியலில் இயங்குகிறார்கள், ஏன் 'ஆண்களைப்' போல் குடிக்கவும் புகைக்கவும் செய்கிறார்கள், சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கிறார்கள், அந்த காலம் போல் இன்றிலில்லை' என்னும் பேச்சுகள் உரைகள் முழக்கங்கள் தொடர்ந்து ஒலித்துக்கொண்டே உள்ளன.

மரபான சூழல், புறவெளி மாறியிருக்கிறது. அதற்கு அறிவியலும் உலக மயமாதலும் காரணம். ஆனால், குடும்ப அகச்சூழல் / அகவெளி இன்னும் மாறவில்லை. இதற்கு இந்திய - தமிழ் மரபும் மதம் சார்ந்த ஆண்மைய உளவியலும் காரணம். பெண்களின் உழைப்பை, உணர்வை தாய்மையென்றும் கடமையென்றும் அன்பெனவும் பொய்யை மகிமைப்படுத்தி ஆண்களின் கூட்டம் சுரண்டிக்கொண்டே இருக்கிறது. ஆண்களையும் ஆண் சமூகத்தையும் பெண்கள் சகித்துக்கொள்ள வேண்டும். விட்டுக் கொடுத்து வாழக் கற்றுக்கொள்ள வேண்டும் எனக் குடும்பமும் சமூக நிறுவனங்களும் போதித்துக்கொண்டே உள்ளன. ஆண்களின் அத்தனைத் தவறுகளையும் வன்முறைகளையும் சகித்துக்கொள்வது அன்பு, ஆண்களுக்காக விட்டுக் கொடுப்பது காதல், ஆண்களின் குற்றங்களைத் தண்டிக்காமல் விடுவது கருணை எனப் பெயரிட்டு தங்களைக் கூலியற்ற அடிமைகளாக ஒப்புக்கொடுத்துள்ள பெண்கள் இதனைப் புரிந்துகொண்டு உதறி எழுந்தால்தான் மாற்றங்கள் சாத்தியமாகும்.

குடும்பவெளியிலும்சமூகவெளியிலும்பெண்களின் சுதந்திரம் எல்லைகளற்றதா, கட்டுப்பாடற்றதா, நிபந்தனையற்றதா என்ற துணைக் கேள்விகளை நாம் யாரும் எழுப்பிக்கொள்வதில்லை, அதற்கான பதிலையும் தேடுவதில்லை. அந்தக் கேள்விகள் எழும்போது தாராளவாத உலகமய முதலாளித்துவம் வழியாகக் கிடைத்த குறைந்த அளவு வெளியும் இடமும் அங்கீகாரமும் பறிபோய்விடுமோ என்கிற அச்சம் தொடர்கிறது, அதற்கேற்ப உள்ளார்ந்த அச்சத்துடன் இயங்கும்படி நம் மூளையை வடிவமைத்துக் கொண்டிருக்கிறோம். கடிவாளம் பூட்டிய குதிரைகள் லாயத்திலிருந்து வெளியே சற்று ஓடித் திரும்புவதே போதுமென்ற பொன்மனம் பெண்களுக்கு வாய்த்துவிடுகிறது. அல்லது சர்க்கஸ் மாஸ்டர்களிடமிருக்கும் மாயச் சாட்டைக்கு பயந்து வித்தைக் காட்டும் விலங்குகளாகிவிடுகிறோம்.

இந்து சனாதனத்தை எதிர்த்து, வர்ணாசிரம இழிவுக் கலாச்சாரத்தை உடைக்க, தீண்டாமைக்கு எதிரான மாற்றுப் பண்பாட்டையும், மாற்று வாழ்வியலையும் முன்னெடுக்க இயக்கங்களும் அதற்கான பத்திரிகைகளும் தமிழில் எழுந்துள்ளன. பகுத்தறிவு, சமூகநீதி அரசியலை வலியுறுத்திய ரெட்டமலை சீனிவாசனார் நடத்திய 'பறையன்' (1893), பண்டிதர் அயோத்திதாசரின் 'ஒரு பைசா தமிழன்' (1907), பெரியாரின் 'குடியரசு' (1925), 'விடுதலை' (1935) போன்ற இதழ்கள் அச்சு ஊடகக் காலத்தில் பகுத்தறிவையும்சமத்துவத்தையும் மக்களிடம்கொண்டு சென்றன. மக்களுக்கான அறிவியல், சமூகநீதிக் கருத்தியலை தொடர்ந்து கற்பித்துக் கொண்டே இருந்தன.

அச்சு ஊடகங்களின் வழி புதிய அரசியலை, மக்களுக்கான கருத்தியலை கற்கத் தொடங்கிய மக்களுக்கு நவீன யுகம் ஒலி-ஒளி ஊடகங்களை அறிமுகப்படுத்துகிறது. அரசின் பிரச்சாரத்துக்கான ஒலி ஊடகம் கலை, கதாகாலச்சேபம் என்ற பெயரில் செத்துக் கொண்டிருந்த சனாதன இந்துமத, வர்ணாசிரத்துக்கு புத்துயிர் அளித்தது. மக்கள் அரசியலையும் பகுத்தறிவுப் பண்பாட்டையும் பேச வேண்டிய மாற்று ஊடகம் நவீன வடிவத்திற்கு மாறாமல் பின்தங்கிப் போனது. மாற்று அரசியல், கருத்தியல் பரப்புரைக்கான நவீன ஊடகத்தளங்களைக் கட்டியெழுப்ப இயலாத நிலையில் இன்றைய ஒலி -ஒளி - மின்னணு ஊடகங்கள் மக்களை வாரிச்சுருட்டிச் செல்லும் இரண்டாவது கட்டம்

உருவானது. மாற்று அரசியலின் தேக்கமே இதற்கான காரணம், சுடர் அணைந்த இடத்தில் இருள் சூழ்வதென சனாதனம் குடும்பங்களைச் சூழ்ந்துகொண்டது.

காட்சி ஊடகங்கள் மக்களுக்குக் கருத்துச் சொல்லவும் கருத்துத் திணிக்கவும் பழமையை வலியுறுத்தும் வலிமைகொண்ட இயந்திரங்களாக உள்ளன என்பதை அறிந்திருந்தும் பகுத்தறிவு, சுயமரியாதை, சமூகநீதி கருத்துக்களை மக்களுக்குப் பரப்பும் காட்சி ஊடகங்களை நிறுவ பகுத்தறிவு, சமூகநீதி பேசும் இயக்கங்கள் முன் வரவில்லை. இவர்களின் அமைதிதான் இன்றைய பிற்போக்கு ஊடகத்தின் பெருக்கத்திற்குக் காரணமாக அமைந்தது. திராவிட அரசியலின் பெயரைக் கொண்ட காட்சி ஊடகங்கள் மாய மந்திரம், குடும்பப் பெண்களுக்குள்ளான சதித்திட்டங்கள் பற்றிய தொடர்களைப் பெருக்கி புதிய ஒரே விதமான காட்சி துய்ப்பு போதையை உருவாக்கிவிட்டன.

பெரியாரின் முன்னெடுப்பால் தமிழகம் முழுதும் பரவலாக நிகழ்ந்த சுயமரியாதைத் திருமணங்கள், சாதிமறுப்புத் திருமணங்கள், விதவை மறுமணங்கள் இந்துமதத்தின் அடித்தளத்தை அசைத்தன. குடும்பத்தை அடிப்படையாகக் கொண்ட சாதியப் படிநிலை வழி தனது மேலாதிக்கத்தை உறுதி செய்யும் பார்ப்பனிய, ஆரியக் கூட்டம் அதற்கெதிரான திட்டத்தை முன்னெடுக்கத் தொடங்கியது. இராஜகோபாலாச்சாரி சென்னை மாகாண முதல்வராக பதவியேற்றதும் 1938இல் மாணவர் அனைவருக்கும் இந்தி கட்டாயமென ஆணைப் பிறப்பிக்கிறார். வடவர் கலாச்சாரத்துக்கு எதிராக திராவிட நாடு திராவிடருக்கே என்ற முழக்கத்தை எழுப்பி பெரியார் ஆரியப் பண்பாட்டை பரப்பும் இராமாயணத்தைத் தீயிட்டுக் கொளுத்துகிறார். இந்தியைத் திணித்து ஆரியக் கலாச்சாரத்தை குழந்தைக்கு தாலாட்டுப் பாடுவது போல எளிதாய் புகுத்தும் சதியை நிறைவேற்ற முயற்சிக்கிறார் இராஜகோபாலாச்சாரி. காரைக்குடி சா.கணேசனை வைத்து 1939இல் நிறுவப்பட்ட கம்பன் கழகம் இராமாயணத்தை தமிழர் வாழும் பகுதியெங்கும், கடல் கடந்தும் பரப்பத் தொடங்கியதற்கு காரணம் பகுத்தறிவு அழிப்புத் திட்டமே.

"சிறைகாக்கும் காப்புவென் செய்யும் மகளிர் நிறைகாக்கும் காப்பே தலை" போன்ற பெண்களை அவமதிக்கும் குறள்களுக்காகவும் அதில் காணப்படும் சில ஆரியப் பண்பாட்டுக் கூறுகளுக்காகவும் திருக்குறளை விமர்சித்துக் கொண்டிருந்தார் பெரியார். திருக்குறளின் மீது சில விமர்சனங்களிருந்தாலும் சமதர்மத்தை சமூகநீதியை வலியுறுத்தும் நூல் இது ஒன்றே என்று அடையாளம் கண்ட பெரியார் 1949இல் திருக்குறள் மாநாடு நடத்துகிறார். பெண்களுக்கு கற்பென்னும் இழிவையும் அறியாமையையும் அடிமைத்தனத்தையும் சனாதனத்தையும் திணிக்கப் புறப்பட்ட கம்பன் விழாக்களுக்கு எதிராக இயக்கம் கட்டுகிறார். அறிஞர்கள் குறளை மக்களுக்கு எடுத்துச் சென்று ஆரியத்துக்கு எதிரான தமிழர் பண்பாட்டை காப்பாற்ற வேண்டும் என ஆணை யிடுகிறார். இராவண வதத்திற்கு எதிரான இராம வதம் நடத்திக் காட்டுகிறார் மணியம்மையார். இவ்வகையான எதிர்த்தாக்கு அரசியல் நிகழ்வுகள் பெரியாரின், மணியம்மையின் மறைவுக்குப் பின் முன்னெடுக்கப்படாமல் திராவிட இயக்கங்களும் கட்சிகளும் கருத்தியல் போராட்டங்களை நடத்துவதை நிறுத்திக் கொண்டன. பெரியார் தம் வாழ்நாளில் 8600 நாட்கள், 13,12,000 கி.மீ தொலைவு பயணம் செய்து 10,700 கூட்டங்கள் நடத்தி, 21,400 மணிநேரம் உரையாற்றி உருவாக்கிய விழிப்புணர்வைப் பலமடங்காகப் பெருக்கி சனாதனத்தை அழித்தொழிக்கும் திட்டத்தைத் தொடராமல் சனாதனமும் அதன் அடிமைகளும் தமிழகத்தைக் கைப்பற்ற விட்டுவிட்டோம்.

## வண்ண யுகம்

அரசு என்ற முன்வாசல் வழியும் கலையென்ற பின்வாசல் வழியும் நுழைந்து பெண்ணுரிமையை, பெண் சுதந்திரத்தை கட்டுப்படுத்தி தன் கைக்குள் அடக்க நினைத்த ஆரியக் கலாச்சாரத்தை இருவாசல்களிலும் தடுத்து நிறுத்த போராடியிருக்க வேண்டும். ஆனால், பெரியாரின் வழிதோன்றல், திராவிடக் கட்சியின் கலைக்குரல் என்று சொல்லிக்கொண்டு உருவான சன் தொலைக்காட்சி பட்டிமன்றங்களில் வீசப்பட்ட எச்சில் இலைகளான இராமாயண, மகாபாரதக் குப்பைகளை உள்வீட்டுக்குள் கொண்டுவந்து கொட்டியது. தமிழர்களின் தலைக்குள் பகுத்தறிவுக்கெதிரான குடும்ப மதிப்பீடுகள் கொண்ட காட்சிகளை ஓயாமல் புகுத்தியது. இவை பற்றிய விமர்சனம் இல்லாமல், அதன் அரசியலைப் பேசாமல் சமூகநீதி, சமத்துவம் என்பதை இடஒதுக்கீடு, இந்தி எதிர்ப்பு என்ற இரண்டில் மட்டுமே மையப்படுத்துவது எந்த மாற்றங்களையும் உருவாக்கப்போவதில்லை.

காட்சிவழித் தொடுக்கப்பட்ட பார்ப்பன கருத்தியல் யுத்தத்தால் சனாதன பண்பாடும் வர்ணாசிரமும் பெண் அடிமைத்தனமும் திரும்பவும் ஆழமாக வேர்ப்பிடிக்கத் தொடங்கி இன்று இந்துத்துவ சமூக மனம் தமிழர்களின் இல்லம் சார்ந்த அரசியலாக மாறி விட்டது. தமிழர்களின் குடும்பங்களில் சடங்குகளில் விழாக்களில் கொண்டாட்டங்களில் டிஜிட்டல் மனுக்களின் ஆதிக்கம். அவர்களே தினவாழ்வையும் முழுவாழ்வையும் திட்டமிட்டுத் தருகிறார்கள். பிறப்பிலிருந்து இறப்புவரை காலம், நாள், கிழமை, கோள், நட்சத்திரம், வடக்கு தெற்கு வாஸ்து என ஆரிய பார்ப்பனப் பண்பாட்டின் படி மொத்த வாழ்வையும் படம் வரைந்து தருகின்றனர்.

தொலைக்காட்சி பெட்டிகள் பெண்களின் இன்பம், டாஸ்மாக்கில் ஆண்களின் பேரின்பம் என வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கும் தமிழ்ச் சமூகம் சில காலம் இனவிருத்திச் சேவையை நிறுத்தி வைக்கலாம் எனத் தோன்றுகிறது. எந்த வீடுகளில் நுழைந்தாலும் தொடர்கள், கண்டம் கடந்து ஐரோப்பா சென்றாலும் ஆசிய நாடுகளுக்குச் சென்றாலும் தொலைக்காட்சித் தொடர்கள் நேரலை நிகழ்ச்சிகள்தான் தமிழர்களை ஆளுகின்றன. தமிழர்கள் தொடர்களின் பாத்திரங் களுடன்தான் குடும்பம் நடத்துகின்றனர். சக மனித உரையாடல்கள் எல்லாம் சீரியல், சினிமா, கதாநாயகன், கதாநாயகி, டாஸ்மாக், சாதி, பிகர், ரேப், கிரிக்கெட், தலைவன் எனப் பேரலைகளிலும், கல்வி, வேலை, வாழ்வாதாரமென்ற சிற்றலைகளிலும் மோதி மோதி




அடக்கி வைத்துக்கொண்டு பெண்கள் தங்களை எப்பவும் தற்காத்துக்கொள்ளும் அவஸ்தையில் அழுந்திக் கிடக்கவும், ஓயாத பாதுகாப்பற்ற உணர்வில் சிக்கிக்கிடக்கவும், மீளமுடியாத தாழ்வுணர்ச்சியில் அடைந்து கிடக்கவுமான உளவியலைத்தான் முலதனமாக்கி இருக்கின்றனர் இந்த டிஜிட்டல் மநு கிரிமினல்கள். பெண்கள் இயல்பிலேயே எதையும் குறுக்கு வழியில் அடையும் கெட்ட எண்ணமும் தந்திரமும் உடையவர்கள் என்று டிஜிட்டல் வேதம்பாடம்புகட்டுகிறது.பொய் திரும்பத் திரும்ப சொல்லப்பட்டு உண்மையாக்கப்படுகிறது. பெண்களும் இதனை நம்பத் தொடங்கியிருக்கிறார்கள். தொடர்களில் வரும் தீய பெண் நானில்லை என்று தனது ஒவ்வொரு செயல் மூலமும் ஆண்களுக்கும், ஆணாதிக்கச் சமூகத்துக்கும் நிரூபிப்பதையே தங்கள் வாழ்க்கை நடத்தையாகமாற்றிக்கொள்ளவேண்டியமன அமைப்பு பெண் உளவியலாக மாறிக்கொண்டு வருகிறது.

மூழ்கித் தொலைந்து கண்ணுக்குத் தெரியாமல் கரைந்து போய் கொண்டிருக்கிறது.

ஒரு இனத்தை அழிக்க அம்மக்களின் மொழியை அழிக்கவேண்டும் என்பது பழமொழி. ஒரு இனத்தை அழிக்க அவ்வினத்தின் பெண்களின் இயல்பை அழிக்கவேண்டும் என்பது புதுமொழி. திரைப்பெட்டியில் பளபளக்கும் பெண் பிம்பங்கள் பலரும் கெட்டவர்களாக தீயவர்களாக இரக்கமற்ற கொலைகாரிகளாகவே காட்சிப்படுத்தப்படுகிறார்கள். பெண்கள்தான் பெண்களின் எதிரிகள், அவர்கள் அடங்காத அல்லிராணிகள் என்று தொடர்ந்து சித்தரிக்கப்படுகிறார்கள்.

சமூகத்தில் இந்த அளவு 'கிரிமினல் புத்திசாலி அல்லது புத்திசாலி கிரிமினல்களாக' பெண்கள் வாழ்ந்திருந்தால் இந்த நவீன உலகத்தை என்றோ தங்கள் காலடியில் சுழலவிட்டிருப்பார்கள். தங்கள் கைவிரலால் அதனை ஆட்டிப் படைத்திருப்பார்கள். ஆனால், உலகம் அவர்கள் தலைமீது சுழல்கிறது. இன்னும் அடுப்படிக் கரித்துணியுடன்தான் பெண்கள் கிடக்கிறார்கள். என்றும் இதற்குப் பொருள் இல்லை. பெண்கள் கூட்டம் தங்களையே குற்றவாளிகளாய்க் காட்டும் பிம்பங்களைப் பார்த்து அஞ்சி தொலைக்காட்சி திரைகளுக்கு முன் முகம் வெளிற அமர்ந்திருக்கிறார்கள். வாழ்வின் துயரங்கள் அனைத்திற்கும் பெண்களின் குற்ற மனமே காரணமோ என அச்சம் புகுத்தப்படுகிறது. செய்யாத குற்றமும், நிஜமற்ற குற்ற உணர்வும் புதிய பெண் உளவியலாக இப்போது மாறியிருக்கிறது. பழி, தண்டனை இரண்டும் பெண் மனதின் ஆழத்தில் புதைக்கப்படுகிறது. முன்பு தங்களை இரக்கம், துயரத்தின் வடிவங்களாக அபலைகளாக எண்ணிய பெண் மனம் குற்றம், சதி, குற்றவுணர்வு, தண்டனை, பதுங்குதல் என்ற உள அமைப்புக்குள் சிக்க வைக்கப்பட்டுள்ளது.

மொத்த சமூகத்தையும் ஆண்களின் காலடியில்

திரைப்படங்களில் வந்த பெண் வில்லிப் பாத்திரங்கள் ஒருஓரப்பகுதியில் இருந்தன. 1990களுக்குப் பிறகு பெண் மனதின் புதிய ஆழம் அல்லது பாதாளத்தைக் கண்டுபிடிக்க எந்த செயற்கைக்கோள் அல்லது நுண்ணோக்கி இவர்களுக்கு உதவியது? பெண்ணின் ஆழ் உளவியல் 'கிரிமினல் இம்பல்ஸ்' ஆல் ஆனதென்று அறிவியலுக்கும் சமூகவியலுக்கும் புறம்பான கட்டுக்கதையை வெற்றிகரமாகப் பரப்பிக் கொண்டிருக்கின்றன காட்சி ஊடகங்கள்.

உண்மையாகஇருப்பதைவிட பொய்சொல்ல அதிக புத்திசாலித்தனம் வேண்டும். உண்மையாக இருப்பவர் தன் அன்றாடச்செயல்களை நினைவுவைத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. பொய் சொல்லும் ஒருவர் எப்போது யாரிடம் எதற்கு என்ன பொய் சொன்னோம் என்பதை நினைவில் நிறுத்திக்கொள்ள மூளையை அதிகமாக செலவிட வேண்டும். ஒரு பொய் பொய்த்துப் போகாமல் காக்க அதன் மீதான கட்டுக்கதைகளை உருவாக்க வேண்டும். வாழ்நாள் முழுதும் நல்லவனாக, தியாகியாக நடித்துக்கொண்டே இருக்க வேண்டும். உண்மையான இருப்பவர்களுக்கு அறத்துடன் வாழ்பவர்களுக்கு இந்நெருக்கடிகள் இல்லை யாருக்கும் நிரூபிக்க வேண்டிய அவசியமுமில்லை.

அதுபோல் குற்றத்தின் வழி பலனடைய நினைப்பவர்களுக்கும் அதிக திறமைத் தேவை. அக்குற்றத்தை மறைக்க சமூகத்திற்கு தன்னை நல்லவனாகக்காட்டிக்கொள்ள, தண்டனையிலிருந்துத் தப்ப அதிகப் புத்திசாலித்தனம் தேவை. குற்றத்தை விழையா மனத்துக்கு இந்நெருக்கடிகள் இல்லை. தனக்கு அதிகாரமில்லாத, உரிமையில்லாத இந்த உலகில் பெரும்பாலான பெண்கள் எவ்வளவு துன்பம் வந்தாலும்

தாங்கிக்கொள்கிறார்கள், எவ்வளவு சுமையையும் ஏற்றுக்கொள்கிறார்கள். தன் கழுத்துக்கு கத்தி வரும்வரை, அல்லது குழந்தைகளுடன் நீர்நிலைகளின் அடியாழ இருளில் தஞ்சமடையும் வரை அவர்கள் பொறுத்துக் கொள்ளும் மனதை காத்துவருகிறார்கள்.



வறுமையால் திருட்டு, களவு, வழிப்பறி, கொலையில் ஈடுபட்டு பொருளீட்டி வாழ்க்கை நடத்திய சில சாதிகளை குற்றப்பரம்பரையாக அறிவித்து தினமும் கையெழுத்துப் போட வைத்து காவல் நிலைய திடலில் உறங்கும் தண்டனை அளித்த ஆங்கிலேய சட்டங்கள் மனிதவுரிமைக்கு எதிரானதென்ற போராட்டத்தால் நீக்கப்பட்டன. ஆனால், இப்படியான வரலாறு எதுவுமேயில்லாத பெண் சமூகத்தை குற்றப் பரம்பரையாக இந்த ஆண்கள் சித்தரிக்கக் காரணம் என்ன? முதலும் கடைசியுமான காரணம் பெண்கள் மீதான ஆண்களின் வரலாற்று பூர்வமான உயிரியல் அச்சம். பெண்களை சமமாக வாழவிட்டால் தங்கள் சுகபோக ஆதிக்க வாழ்வை இழந்துவிடுவோம் என்ற பயம். எஜமானன் என்ற பதவி பறிபோய்விடுமோ என்ற பதட்டம், அவர்களின் ஆழ்மனதைத் தூக்கமிழக்கச் செய்கிறது.

பெண்களைப் பார்த்து பயம்கொள்ளும் ஆண்களின் அடிப்படையான அச்ச உணர்வை உருமாற்றி பெண்கள் இயல்பிலேயே குற்றவாளிகள் எனத் திரித்து அதனை மெய்போல காட்டிக் கொண்டிருக்கின்றனர். தாங்கள் செய்யாத, செய்யத் துணியாத குற்றங்களுக்காக பெண் சமூகத்தை குற்றவுணர்வுக்குள்ளாக்கி அடங்கிய மனநிலையை உருவாக்கும் அயோக்கியர்கள் இத்தொடர்களை பணம் கொழிக்கும் தொழிலாக பெருக்கிக் கொண்டுள்ளனர்.

பார்ப்பான் தனக்குக் கீழ் பல சாதிகளை அடிமையாக்கி, வேலையே செய்யாமல் ஏமாற்றி பிழைத்து, அதிகாரம் செய்வது போல், ஆண் தனக்குக் கீழ் எப்போதும் பெண்ணை அடிமையாகவே வைத்திருக்கும் தேவையிருக்கிறது. இதற்குப் பெண்களை தயார்படுத்த இதுவரை சொல்லிவந்த இதிகாச புராணக் கதைகளெல்லாம் அப்படியே திரும்ப சொன்னால் இன்றைய நவீனப் பெண்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். புராண கால பெண்களில் உள்ள கெட்டவர்கள் எங்கோ ஒருவர் என்பதால் அதனையும் அதிகம் பொருட்படுத்த மாட்டார்கள். எனவே, நவீன சமூகத்தில் வாழும் பெரும்பான்மையான பெண்களை குற்றம், சதி, செய்யும் கூட்டமாகச் சித்தரித்தால்தான் பெண்களை தற்காலக் குற்றவுணர்வு கொண்டவர்களாக மாற்ற முடியும். ஆண்களின் குற்ற நடத்தைகளைக் கேள்விக் கேட்க முடியாத தாழ்வுணர்வு கொண்டவர்களாக உருவாக்க முடியும்.

"ஆண்கள், பெண்களின் விடுதலைக்கு பாடுபடுவதால் பெண்களின் அடிமைத்தனம் வளருவதுடன் பெண்கள் என்றும் விடுதலை பெறமுடியாத கட்டுப்பாடுகள் பலப்பட்டுக் கொண்டுவருகின்றன. பெண்களுக்கு மதிப்புக் கொடுப்பதாகவும், பெண்கள் விடுதலைக்குப் பாடுபடுவதாகவும் ஆண்கள் காட்டிக்கொள்வதெல்லாம் பெண்களை ஏமாற்றுவதற்குச் செய்யும் சூழ்ச்சியே ஒழிய வேறல்ல. எங்காவது பூனைகளால் எலிக்கு விடுதலை உண்டாகுமா? எங்காவது நரிகளால் ஆடு கோழிகளுக்கு விடுதலை உண்டாகுமா? எங்காவது முதலாளிகளால் தொழிலாளிக்கு விடுதலை உண்டாகுமா? எங்காவது பார்ப்பனர்களால் பார்ப்பனர் அல்லாதவருக்குச் சமத்துவம் கிடைக்குமா? என்பதை யோசித்தால் இதன் உண்மை விளங்கும். அப்படி ஒருகால் ஏதாவது ஒருசமயம் மேற்படி விஷயங்களில் விடுதலை உண்டாகிவிட்டாலும் கூட, ஆண்களால் பெண்களுக்கு விடுதலை கிடைக்கவே கிடைக்காது என்பதை மாத்திரம் உறுதியாய் நம்பலாம்."
- பெரியார் (குடியரசு - 12.8.1928)

இந்தியாவில் வர்க்கம் சாதி வடிவில் மட்டுமில்லை பெண் என்ற வடிவிலும் இருக்கிறது. எந்தப் புரட்சியும் பெண்ணின் விடுதலையிலிருந்துதான் தொடங்க முடியும். பெண்ணெனும் அடிமை மற்றொரு அடிமையைத்தான் பெற்றெடுக்க முடியும். பெண்களின் தோளில் ஏறி ஆண்கள் உயர்ந்தவனெக் காட்டிக் கொள்ளவதல்ல கலை. சரித்திரம் முழுதும் ஆண்களைச் சுமந்து முதுகு வளைந்த பெண்கள் கொஞ்சம் நிமிரட்டும். ஆண்கள் தங்கள் கதைகளை தாங்களே எழுதட்டும், பெண்கள் தங்கள் கதைகளை கால தாமதமானாலும் தாங்களே எழுதிக்கொள்வார்கள்.

(தொடர்வோம்)

**மாலதி மைத்ரி**

<anangufeministpublication@gmail.com>

# ஷங்கர்ராமசுப்ரமணியன் கவிதைகள்



## 1. அருவிக்குப் போகும் பெண்

இன்னும் எத்தனையோ மர்மங்கள் அவிழாத
வயிறான
பொங்குமாங்கடலில்
ஹோவென்று விழுந்து
வெள்ளியாய்ப் பரவி
பின்னிரவில்
தனிமையைக் கூடுதலாகச் சூடியிருந்தது
சில்லிப்பின் பேரருவி
உறவினர் திருமணத்துக்காக முந்தின நாளே
தென்காசி வந்திருந்தவளை
மூன்று மைல் தாண்டியும்
பூந்தூரலின் தோரணமசைத்து
அழைத்தது பேரருவி
மணப்பெண்ணுக்கு தாழம்பூ பின்னலிட்ட
விரல்களை முகர்ந்தபடி
ஊரில் விட்டுவந்த உடையவனை நினைத்து
யானைப் பாலத்தில்
ஒற்றை ஆளாய் பேருந்தேறினாள்
நாகம் போல புட்டம்வரை படர்ந்திருந்த சடையை
தொட்டுப் பிடித்துப் பெருமிதம் கொண்டாள்
சாரல் காற்றில் மூலிகை மணக்க
ஜல் ஜல்லெனும் கொலுசொலி
முதல்முறையாக
தனக்கே எதிரொலிக்க
கையில் பையோடு
தன்னை நோக்கி வருபவளைப் பார்த்துச் சிவந்தது
பேரருவி
காலத்தில் குற்றாலத்தைக் கடந்துபோன சிற்பிகள்

நீர்பட வாய்ப்புள்ள கால்பட வாய்ப்பில்லாத
கல்சரிவுகளில்
செதுக்கிய லிங்கங்கள்
அவள் ஆகிருதி கண்டு கண்மூடிச் சுருங்கி விரிந்தன
அழுதுவடிந்த குழல்விளக்கொளியோடு
கருங்கற்களைக் குழைத்துப் பூசிய
சிமெண்ட் தரை பிசுபிசுக்கத் தொடங்க
நீரின் காமம் கால்களைப் பின்ன
ஆண் இடம் பெண் இடம் பேதம் தெரியாமல்
சரக்கென்று செருகிக் கொண்டாள்
நீரின் அடிக்குளிர் ஊசியாய் முதலில் குத்த
வெளியே குழந்தை போல ஓடிவந்தாள்
நடுங்கியபடி
பிரமாண்டத்தைத் தாங்கி நிற்கும்
மலையின் கோடுகளைப் பார்த்தாள்
மரங்களின் பச்சையெல்லாம் நீலமாய்த் தெரிந்தன
அருகில் விழுந்துகொண்டிருந்த பேரருவி
காதல் சிறுவனென
குழைந்து அழைக்க
நெருங்கிச் சேர்ந்தாள்
நீரும் உடலும் வெதுவெதுப்பை உணர
அருவியின் காட்டுக்குள் திளைக்கத் தொடங்கினாள்
பிதுர் கண்டம் தீர்த்த புரம்
சிவத்துரோகம் தீர்த்த புரம்
மதுவுண்டான் உயிர் மீட்ட புரம்
பவர்க்க மீட்ட புரம்
வசந்தப் பேரூர்
முதுகங்கை வந்த புரம்
செண்பகாரணிய புரம்
முக்தி வேலி
நதிமுன்றில் மாநகரம்
திருநகரம்
நன்னகரம்
ஞானப்பாக்கம்
வேடன் வலஞ்செய்த புரம்
யானை பூசித்த புரம்
வேத சக்தி பீட புரம்
சிவ முகுந்த பிரம புரம்
முனிக்கு உருகும் பேரூர்
தேவகூட புரம்
திரிகூடபுரம்
புடார்ச்சுனபுரம்
குறும்பலா விசேட புரம்
அல்ல
திருமால் சிவனான திருவிளையாடல்
குறுமுனி குறும்பலா
பகலில் மலையை மறைக்க முயலும்
குரங்குகள் அல்ல
அவ்விடம் அப்போது
தலம் மறந்து தலவிருட்சம் மறந்தது
எல்லாவற்றையும் கழுவி மறந்தழித்து
விழுந்து
தானும் அவளுடன்
குளித்துக் கொண்டிருக்கிறது பேரருவி
அவள் உள்ளே குளிக்கும் போது
மலையெல்லாம் சடைசடையாக முளைக்கத்
தொடங்கின
அருவிகள்
அருவி ஒன்றல்ல
கதை ஒன்றல்ல
எதுவுமே ஒன்றல்ல
அவள் அவ்வப்போது
இப்போதும்
அகாலத்தில் பேருந்தில் வந்திறங்குகிறாள்
விளக்குகளின் கண்களை அவிக்கும் இருட்டில்
பேரருவிக்குள் கூந்தல் அவிழ்த்து நுழைகிறாள்
அவள் அருவிக்குள் போகும் கதையை
மட்டுமே
எனக்குச் சொல்லத் தெரியும்.



## 2. இம்சை அகிம்சை

ஓங்கியடர்ந்த ஒரு காடு
அதில் உயர்ந்த ஒரு மரம்
சிங்கத்தைப் பார்த்தவுடனேயே
அண்டசராசரமும் குலுங்கின.
சிங்கம்
பெரிய மான் ஒன்றைக் கவ்வியபடி
சரசரவென்று ஏறி கிளைகளுக்குள்
மறைந்தது
அதைப் பார்த்த திரைக்கு வெளியேயும்
வேட்டையின் தினவு படர்ந்தது.
ஒரு நள்ளிரவில்
அப்பா இப்படித்தான்
அம்மாவை மரத்துக்கு மேலே இழுத்துச் சென்றார்
அன்றிலிருந்து
கடவுள் நிர்வகிக்காத காடாகத்தான்
வீடுகள் இருக்கின்றன
அவர்மீது தொடங்கிய கொலைவன்மம் தான்
இத்தனை ஆண்டுகளில்
வேறு வேறு உடல்களுக்கு
வேறு வேறு நபர்களுக்கு மாறியிருக்கிறது
அவனுக்கு அன்று உறக்கம் வரவில்லை
மானின் தலையும் உடலும்
ஆடி நடுங்கியபடி
ஒரு நள்ளிரவுக்குள் எரியும் பகலில்
சிங்கமும் மானும் நிகழ்த்தியது இம்சைதான்
மானின் தலையும் உடலும் ஆட
ஒரு நள்ளிரவுக்குள் எரியும் பட்டப்பகலில்
சிங்கமும் மானும் நிகழ்த்தியது அகிம்சையும்தான்
என்றும்
உலகம் சொல்லித் தருகிறது. ●

**ஷங்கர்ராமசுப்ரமணியன்**
**<shankarashankara@gmail.com>**

(தொடர்ச்சி 56ஆம் பக்கம்)

# அரசன் அன்றே கொன்றால் லியனகே நின்று கொல்வார்

**இளங்கோ ஓவியம்: Jacob Lawrence**

'எழுதியதால் கடத்தப்பட்டு காணாமற் போனவர்களின் மனைவிகள், பிள்ளைகள் சார்பாக உங்களை இங்கு வரவேற்கின்றோம்' என ஒரு பெண்மணி, காலி இலக்கிய விழாவுக்கு வந்தவர்களுக்கு துண்டுப்பிரசுரம் கொடுத்துக்கொண்டிருந்தார். வசந்த அப்போதுதான் புகையிரத நிலையத்தில் இறங்கி பிரபல்யம் வாய்ந்த காலி கிரிக்கெட் மைதானத்தைத் தாண்டி நடந்து வந்துகொண்டிருந்தான். அன்று வெள்ளிக்கிழமை என்பதால் அது வசந்த அவனது காதலியைச் சந்திக்கும் நாளாக இருந்தது.

பேராதனைப் பல்கலைக்கழகத்தில் படித்துக் கொண்டிருந்த நயோமிக்கு கடல் மீது அளவற்ற விருப்பு இருந்தது. நீர்கொழும்பு, அறுகம்பே, ஹிக்கடுவ, பாசிக்குடா என கடற்கரைகளைத் தேடி அடிக்கடி வசந்தவும், நயோமியும் போய்க்கொண்டிருப்பார்கள். சனம் அதிகம் இல்லையென்றால் நயோமி உடனேயே நீருக்குள் இறங்கிவிடுவாள். இம்முறை காலியைத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். வசந்த அங்கே போய்ச்சேரும்வரை காலி இலக்கிய விழா அன்றுதான் தொடங்குகின்றது என்பதைப்பற்றி அவன் அறிந்திருக்கவில்லை.



இலங்கையில் போர் முடிந்து அப்போதுதான் ஒன்றரை வருடங்கள் ஆகியிருந்தது. வசந்தவை யுத்தம் மிகவும் பாதித்திருந்தது. ஒரு ட்றோஸ்கியவாதியான அவனால், மிலேச்சனத்தனமாக அதை நிகழ்த்தி முடித்த அரசை ஒருபோதும் ஏற்றுக்கொள்ள முடியாதிருந்தது. கொடூரமான யுத்தம் நடந்து போரால் பாதிக்கப்பட்ட மக்களில் பலர் முள்வேலிகளுக்குள் இருக்கும்போது இப்படியொரு இலக்கிய நிகழ்வு அவசியமா எனப் பலர் கேள்விகளை எழுப்பியிருந்தனர். இலங்கையில் போர் முடிந்தபின்னும் எழுதுபவர்களின் உயிருக்கு உத்தரவாதமில்லை எனச்சொல்லி, ஒரான் பாமுக்கும் கிரண் தேசாயும் இந்த நிகழ்வுக்கு வராது பகிஷ்கரித்துமிருந்தனர்.

அந்தப் பெண்மணி வெள்ளையுடையில் நின்று அவரின் பிள்ளைகளோடு கொடுத்துக் கொண்டிருந்த துண்டுப்பிரசுரத்தை வாங்கிக்கொண்டு, நயோமி இன்னும் கண்டியிலிருந்து வந்து சேராததால் கடற்கரைப் பக்கமாக வசந்த நடக்கத் தொடங்கி யிருந்தான். நெடிதுயர்ந்து நின்ற கலங்கரை விளக்கை, அதனருகில் நின்ற தென்னை மரங்கள் ஆரத்தழுவது போல காற்று வீசிக்கொண்டிருந்தது. அதன் வெண்மை வசந்தவுக்கு விகாரைகளை நினைவுபடுத்தின. இறுதியில் எப்போது விகாரைக்குப் போனேன் என்பதே அவனுக்கு மறந்துபோயிருந்தது. இந்த வெண்மை என்பது உண்மையில் அமைதியை நினைவூட்டுகின்றதா, இல்லை அதற்குள் சொல்லப்படாத பதற்றமான கதைகளை புதைத்து வைத்திருக்கின்றதா எனவும் வசந்தவுக்குக் குழப்பமாயிருந்தது. காலி இலக்கிய விழாவுக்கு எல்லோரும் குதூகலத்துடன் வர்ணமயமான ஆடைகளுடன் வந்துகொண்டிருக்கையில், வெள்ளையுடையில் துண்டுப்பிரசுரம் கொடுத்த பெண்மணியைப் போலத்தான், இந்த கலங்கரை விளக்கும் தனக்கான துயரத்துடன் இருக்கிறதோ என அவன் நினைத்துக்கொண்டான்.

தென்னை மரங்களின் நிழலில் அமர்ந்தவாறு வசந்த அந்தத் துண்டுப்பிரசுரத்தை வாசிக்கத் தொடங்கினான். 2010இல் ஜனாதிபதித் தேர்தல் நடைபெறுவதற்கு இரண்டு நாள் முன்பாக தனது கணவன் கடத்தப்பட்டதாகவும், அதற்குப் பிறகு அவரைப் பற்றி இற்றைவரை எந்தச் செய்தியும் தெரியாமல் இருக்கின்றது என்றும், உங்களைப் போன்று எழுதியதற்காகவே எனது கணவர் காணாமற்போனார் என்றும் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. அதை வாசித்த வசந்தவுக்கு இந்தப் பத்திரிகையாளர் கடத்தப்பட்ட ஒரு வருடத்துக்கு முன்னர்தான், இலங்கையில் ஆங்கில வாரவிதழின் பத்திரிகை ஆசிரியர் ஒருவர் பட்டப்பகலில் கொல்லப்பட்ட சம்பவமும் நினைவில் வந்துபோனது. அந்த ஆசிரியர் எழுதிய இறுதிக்கட்டுரையே 'அவர்கள் என்னைத்தேடி ஒருநாள் வருவார்கள்' என்பதாக இருந்ததுதான் இன்னும் பெருஞ்சோகம்.

இந்த அழகான தீவுதான் அடுக்கடுக்காய் எத்தனை அழிவுகளைச் சந்தித்துக் கொண்டிருக்கின்றது. பெரும்



போர் நிகழ்ந்து முடிவதற்கு முன்னர் சூனாமி வந்து ஒரு பேரிழப்பைக் கொடுத்துவிட்டும் போயிருந்தது. வசந்த வந்து இறங்கிய ரெயினைப் போல ஒன்று காலியிலிருந்து கடற்கரையோரமாக மாத்தறைக்குப் போய்க்கொண்டிருந்தபோது, அப்படியே சூனாமி விழுங்கியிருந்தது. அதில் இருந்த நூற்றுக்கும் அதிகமானவர்கள் சொற்ப நிமிடங்களில் இல்லாமற் போயிருந்தனர். உல்லாசப்பயணிகளுக்குரிய நகராய் இப்போது காலி நகரம் மினுங்கினாலும் உள்ளுக்குள் துயரை வைத்து குலுங்கி அழுவது போலத்தான் வசந்தவுக்குத் தோன்றியது. இப்படி, கூட யோசித்து அல்லலுறமால் இருக்க நயோமி விரைவில் வந்தால், எவ்வளவு நன்றாக இருக்குமென நினைத்தபடி பாறைகளில் மோதி எழும் கடலலைகளை நோக்கி வசந்த பார்வையைத் திருப்பினான்.

நயோமி வந்தபோது பேராதனை வளாகத்துக்குள் நிகழும் அரசியல் முரண்பாடுகளை கூடவே எடுத்துவந்திருந்தாள். பேராதனை எப்போதும் இலங்கையின் எரியும் பிரச்சினைகளின் மையங்களில் ஒன்றாக இருந்து வந்திருக்கின்றது. இதமான காலை, ஏற்கனவே காணாமற்போனவரின் துண்டுப்பிரசுரத்தால் குழப்பப்பட்டதால் வசந்தவுக்கு, நயோமி தன் கூடவே கொண்டுவந்திருந்த கம்பஸ் அரசியலைக் கொஞ்சம் தள்ளிவைத்தால் நல்லது போலத் தோன்றியது.

லியனகே அன்று தனது பத்திரிகை அலுவலகத்தில் வேலையை முடித்துவிட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தார். வரும்வழியில் வீட்டுக்கு ஏதேனும் வாங்கிவரவேண்டுமா என தனது மனைவி நிமாலியிடம் தொலைபேசியில் அழைத்துக் கேட்டார். ஜனாதிபதி தேர்தல் நடைபெறுவதற்கு இன்னும் இரண்டு நாட்களே இருந்ததால் வீதிகள் எல்லாம் அமர்களப்பட்டுக்கொண்டிருந்தன. பச்சையும் நீலமுமான பின்னணியில் இரு பிரதானகட்சியின் வேட்பாளர்களும் மக்களிடம் வாக்குக் கேட்டு சுவர்களில் நிரம்பியிருந்தார்கள். நீண்டகாலமாக நடந்த யுத்தம் அப்போதுதான் முடிவுக்கு வந்ததால் பேரரசருக்குரிய மமதையுடன் ஜனாதிபதி சிரித்துக் கொண்டிருந்தார். எதிரிகள் வெளியில் இருந்து வருவதில்லை, உள்ளேயே உருவாகின்றனர் என்பதற்கிணங்க ஜனாதிபதிக்காய் போரை முன்னின்று நடத்திய இராணுவத்தளபதி எதிர்க்கட்சியினரால் ஜனாதிபதி வேட்பாளராக நிறுத்தப்பட, தேர்தல்களம் சூடு பிடித்தது. ஒருபொழுது தோள் மீது கைபோட்டு ஒன்றாக நடந்த இரு நண்பர்கள் இப்போது உறுமிக்கொண்டு தத்தமது எதிர்த்தரப்பை துவைத்துப் போட வெறியுடன் திரிந்துகொண்டிருந்தார்கள்.

லியனகே அவரின் வீட்டுக்கான சிறிய ஒழுங்கையில் இறங்கி நடந்துகொண்டிருந்தபோது, அவருக்காய் ஒளித்து நின்றவர்களால் இரகசியமாகக் கடத்தப்பட்டார். தன்னுடைய கணவர் யாரேனும் நண்பர்களோடு எங்கேனும் கதைத்துக் கொண்டிருக்கலாம் என காத்துக் கொண்டிருந்த நிமாலிக்கு நேரம் செல்லச் செல்லப் பதற்றம் வரத்தொடங்கியது. லியனகேயின் அலைபேசிக்கு அழைத்தபோதும் அழைப்புக்கள் எங்கோ பாழில் தொலைந்துகொண்டிருந்தன. இனியும் பொறுக்க முடியாது என பொலிஸ் நிலையத்தில் முறைப்பாடு

செய்தபோது, லியனகே கொழும்பிலிருந்து இன்னொரு தொலைவான நகருக்கு கைகளும், கால்களும் கட்டப்பட்டு, கறுப்புத்துணி வாயிற்குள் திணிக்கப்பட்டு, வெள்ளை வானில் கொண்டு செல்லப் பட்டுக்கொண்டிருந்தார்.

ஜனாதிபதி தேர்தல் முடிந்து முடிவுகள் அறிவிக்கப்பட்டபின்னும் லியனகேவுக்கு என்ன நடந்தது என்று எவருக்குந் தெரிந்திருக்கவில்லை. போரை எல்லாவித சாணக்கியங்களுடன் நடத்தி முடித்தவரை, ஒன்றுபட்ட இலங்கை என்ற கோஷத்தில் மீண்டும் மக்கள் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுத்தனர். அவருக்கு முதன்மைத் தளபதியாக நின்று யுத்தத்தை கொடூரமாய் நிகழ்த்தி முடித்தவர், தேர்தல் தோல்வியின் பின் சிறைக்குள் அடைக்கப்பட்டு, அதற்கான 'நன்றிக்கடன்' தீர்க்கப்பட்டது. ஆயுதங்கள் மட்டுமில்லை அதிகாரமும் கூரான இருமுனைகள் கொண்டவை என நிரூபிக்கப்பட்டு இராணுவத்தளபதி ஒரு கோமாளியைப் போல அரசியல் களத்தில் ஆக்கப்பட்டார். அவர் முன்னின்று நடத்திய பெரும்போரின் வெற்றியைக் கூடக் காலம் தன் காலில் மிதித்துத் துவைத்துவிட்டு, முன்னே நகரத் தொடங்கியது. மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனாதிபதியின் அதிகார ருசி என்பது வெற்றிக்களிப் போடு மட்டும் நின்றுவிடவில்லை. அது பிறகு தன்னைக் கேள்விகேட்போரை, தனக்கெதிராகக் கருத்துச் சொல்வோரை, கழுத்தை இறுக்கிக் கொல்லவும் செய்தது. வெள்ளை வானில் கடத்திச்செல்லப்பட்ட லியனகேயும் எந்தத் தடயங்களுமில்லாது மக்களின் நினைவுகளில் இருந்து மெல்ல மெல்லமாக மறையத் தொடங்கினார்.

நேரம் மதியத்தை நெருங்கியபோதும் எவரும் கடலுக்குள் இறங்கியிருக்கவில்லை. வந்திருந்த காதலர்க்கு நீராடுவதைவிட செய்வதற்கு நிறையச் சுவாரசியமான வேறு விடயங்கள் இருந்தன. காலிக்கோட்டையில் பசுமை படிந்த மறைவிடங்களில் குடைகளுடனும், குடைகளின்றியும் இருந்த காதலர்கள் அந்த வெயிலுக்குள்ளும் தங்களுக்குள் எதையோ தேடிக்கொண்டிருந்தார்கள். மத்தியானம் தாண்டியபின் சுற்றுலாப் பயணிகள் வந்து இறங்குவார் கள். மாலையாகும்போது கடற்கரைக்கு அருகில் இருக்கும்சிறுவர்கள் பாடசாலை முடிந்துவந்து மீன்குஞ் சுகளைப் போல குதித்துக் கும்மாளமிடுவார்கள்.

சனம் குறைய என்பதால் நயோமிக்கு கடலுக்கு இறங்க ஆசையிருந்தாலும், அன்று வழமையை விட அலைகள் சற்று மூர்க்கமாக இருந்தால் வெளியில் இருந்து வேடிக்கை பார்க்க மட்டுமே முடிந்தது. காணாமற்போன பத்திரிகையாளனைப் பற்றிய துண்டுப்பிரசுரத்தை வாசித்து மனதை எங்கையோ தொலைத்துவிட்ட வசந்தவைப் பார்க்க நயோமிக்குக் கொஞ்சம் பரிதாபம் வந்தது. நாட்டில் நடக்கும் எதற்கென்றாலும் உடனேயே துலங்கலைக் காட்டி சுருங்கிப்போகின்றவனாக வசந்த இருப்பதை பலமுறை பார்த்துப் பழகிவிட்டாள். எனினும் இம்முறை தமக்குரிய ஒருநாளை இப்படி அவன் அரசியலில் தொலைத்துவிடக்கூடாதென்று விரும்பினாள்.

'யுத்தம் நடந்த பொழுதைவிட, இப்போது இன்னும் அரசியல் கோமாளிகள் கூடிவிட்டார்கள். அவர்கள் செய்யும் ஒவ்வொரு கோமாளித்தனங்களுக்கும் நாங்கள் வருந்திக்கொண்டிருந்தால் எங்களின் வாழ்க்கையில் ஒருநாள் கூட நிம்மதியாக வாழமுடியாது' என நயோமி வசந்தவிடம் சொன்னாள். 'அப்படியெனில் இப்படி ஒருவர் காணாமற்போனதற்கு வருத்தப்படக்கூடாது என்கின்றாயா?' என்றான் வசந்த. 'இல்லை, கொல்லப் பட்டவர்கள் மட்டுமில்லை, எதற்காக காணாமல் ஆக்கப்பட்டோம் என்று அறியாமலே உயிரைத் தொலைத்தவர்கள் ஆயிரமாயிரம் பேர் நம் நாட்டில் இருக்கின்றார்கள், எத்தனை பேருக்காய் நாம் நினைத்து வருந்துவது' எனப் பெருமூச்சை விட்டாள் நயோமி.

நயோமி கூறுவதில் நியாயங்கள் இருப்பதை வசந்த உணர்ந்துகொண்டாலும், அவனது ட்ரொஸ்கிய மனதுக்கு அதை ஏற்றுக்கொள்ளக் கஷ்டமாக இருந்தது. இந்த நாட்டில் மனிதர்கள் காணாமல் மட்டுமில்லாது யுத்தம் முடிந்தபின்னும் நாட்டைவிட்டு உயிருக்கு அஞ்சியும் ஓடிக்கொண்டிருக்கின்றார்கள் என்பதையும் வசந்த நன்கு அறிந்திருந்தான்.

சில வருடங்களுக்கு முன் வசந்த முழுநேரமாக, தான் நம்பிய நான்காம் அகிலம் கட்சிக்குக் களப்பணியாற்றிக் கொண்டிருந்தான். எனினும், யுத்தம் தீவிரமாகிக்கொண்டிருந்தபோது எந்தச் சிறு எதிர்க்குரலையும் அரசு சகித்துக்கொள்ளாது அடக்கவும் கண்காணிக்கவும் தொடங்கவும் வசந்தவைப் போன்றவர்கள் தலைமறைவுக்குப் போயிருந்தார்கள். அதன்பிறகு எந்தச் செயற்பாடுகளுக்கும் இலங்கையில் இடமிருக்கவில்லை. அவர்களில் சிலர் இரகசியமாகக் கிடைத்த சில மனிதவுரிமை மீறல் விடீயோக்களோடு வெளிநாடு போக, இலங்கை உளவுத்துறை நாட்டுக்குள் இருந்தவர்களை நெருக்கத் தொடங்கியிருந்தது. சிலரைச் சித்திரவதைகளுக்குப் பெயர்பெற்ற நான்காம் மாடிக்குக் கொண்டு போய் தலைகீழாகக் கட்டி விசாரித்துமிருந்தார்கள்.

இவ்வாறு நாட்டின் நிலைமைகளினால், எல்லாவற்றிலிருந்தும் விலகி இருந்த வசந்தவுக்கு, லியனகேயின் மனைவி நிமாலி காலி இலக்கிய நிகழ்வில் துண்டுப்பிரசுரத்தை, பிள்ளைகளுடன் நின்று கொடுத்ததைப் பார்த்தவுடன், அவனது மனது அந்தரப்படத் தொடங்கியது. ஒரு பத்திரிகையாளரான லியனகேவுக்காக இல்லையெனினும், அவரைக் காணாமல் தவிக்கும் நிமாலிக்காக, லியனகேவுக்கு என்ன நடந்தது என்பதை அறிவதற்கு, இச் சம்பவத்தை தொடக்கத்திலிருந்து பின்தொடர்ந்து பார்க்கவேண்டும் என்ற ஆவல் வசந்தவுக்குள் பெருகத் தொடங்கியது.

லியனகே இப்படிக் கடத்தப்பட்டு காணாமற் போனதற்கு முன்னரும் ஒருமுறை கடத்தப் பட்டிருந்தார். அப்போது அவரைக் கடத்திய முகமூடி மனிதர்கள், லியனகேயை ஓர் இரவு தம்மோடு வைத்திருந்துவிட்டு குப்பைகள் மலையாகக் குவிந்திருக்கும் வறக்காப்பொலவில் அடுத்தநாள் காலையில் கண்ணை கட்டிக்கொண்டுவந்து விட்டு சென்றிருந்தனர். எதற்காகக் கடத்தினார்கள் என்பது கடத்தப்பட்ட லியனகே உட்பட எவருக்குமே



தெரிந்திருக்கவில்லை. தவறாகக் கடத்திவிட்டோம் எனச் சொன்னதாகத்தான் லியனகே தனது குடும்பத்தினரிடம் சொல்லியிருக்கின்றார். ஒரு நெருங்கிய நண்பனிடம் மட்டும், 'மச்சான் இனி பேனாவால் எதையும் எழுத முடியாது, எதை இவங்களுக்கு எதிராக எழுதினாலும் இந்த நாசமறுப்பான்கள் மோப்பம் பிடித்துவிடுவான்கள்' என்று அக்கம் பக்கம் பார்த்துவிட்டு லியனகே மெல்லிய குரலில் சொல்லியிருக்கின்றார்.

இந்த நிகழ்வுகளை ஏற்கனவே கேள்விப்பட்டிருந்த வசந்தவுக்கு இப்போது ஏன் லியனகே மீண்டும் கடத்தப்பட்டுக் காணாமற் போயிருக்கின்றார் என யோசித்தபோது குழப்பமே வந்தது. நிச்சயம் முதலில் கடத்தப்பட்டதற்கும், இப்போது கடத்திக் காணாமற்போனதற்கும் ஏதோ ஒரு தொடர்பு இருக்கவேண்டும் என வசந்த நினைத்தான். முதன்முதலில் இப்படிக் கடத்தப்பட்டபின், லியனகேயை நாட்டை விட்டு வெளியேறச் சொல்லி அவரது நண்பர்கள் வலியுறுத்தியிருக்கின்றார்கள். என்ன நடந்தாலும் என் சொந்த நாட்டிலேயே இருப்பேன் எனப் பிடிவாதமாக இருந்ததால், லியனகே இப்படி அநியாயமாக, வலிந்து காணாமல் ஆக்கப்பட்டுவிட்டாரே என்ற கவலை எல்லோருக்குள்ளும் இருந்தது.

போர் நடந்த காலங்களில் மட்டுமில்லை, யுத்தம் முடிந்தபின்னரும் கூடஇலங்கையில் எதையும் பேசும், எழுதும் சுதந்திரம் இல்லை என்பது முழு உலகும் அறிந்த செய்தியாகவே இருந்தது. எனினும் பிறரைப் போல, பத்திரிகையாளர் என்று எவரும் இப்படிக் காணாமற் போனதில்லை. பத்திரிகையாளர் காணாமற்போவதில்லை என்றவுடன் ஏதோ இலங்கை அரசும், இராணுவமும் அவர்களின் பேனா முனையில் பயம் கொண்டிருக்கின்றது என்பதல்ல அர்த்தம். நேரத்தைக் கடத்தி வீணாக்காமல், நேரடியாகவே வேறொரு உலகுக்குத் துப்பாக்கிக் குண்டால் அனுப்பிவைத்துவிடுவார்கள். ஒரு பட்டப்பகலில் காரில் போய்க்கொண்டிருந்த லசந்தவை மறித்து, அவ்வாறுதான் சுட்டுக்கொன்றிருந்தார்கள். லியனகேவையும் கொல்லவேண்டுமென விரும்பி யிருந்தால் இவர்கள் உடனேயே கொன்றிருக்கலாம். அவ்வளவு வசதிகளும், வாய்ப்புக்களும் இலங்கைத் திருநாட்டில் இருக்கும்போது, லியன்கேயை கடத்தியதற்கு அவரிடம் ஏதோ ஒன்று இரகசியமாக இருந்து அதைக் கடத்தியவர்கள் அறிய வேண்டி யிருந்திருக்கின்றது போலும் என வசந்த வேறொரு திசையில் நின்று எண்ணிப் பார்த்தான்.

லியனகே காணாமற்போனதை எங்கேயிருந்து தொடங்கலாமென்று வசந்த யோசித்தபோது ஓர் இடதுசாரி அவனின் நினைவுக்கு வந்தார். இன்றையகாலத்தில் அவர் அரசதரப்போடு சமரசம் செய்துவிட்டாலும், அவர் இதுகுறித்து என்ன சொல்வார் என அறிய வசந்த அவரை அணுகினான். அவர் லியனகே ஒரு ஊடகவியளாராக இருந்தபோதும், பத்திரிகா தர்மத்துக்கு ஏற்ப ஒழுகி நடக்கவில்லை. அவ்வப்போது மஞ்சள் பத்திரிகைகளின் தரத்துக்கு கீழிறங்கி எழுதியிருக்கின்றார் எனக் கோபமாகச் சொன்னார். ஒருமுறை, திருமணமாகிய அமைச்சர் அடிக்கடி ஒளிந்துபோய்க்கொண்டிருந்த அவரின் இரகசியக் காதலியின் வீட்டைத் துப்பறிந்து லியனகே

கண்டுபிடித்திருக்கின்றார். அதுமட்டுமின்றி தகவல் சேகரிக்கின்றேன் என அமைச்சரின் காதலியை அடிக்கடி சந்தித்து, அந்தப் பெண்மணியோடும் லியனகேவுக்கு ஓர் இரகசியமான உறவு வந்திருக்கின்றது. சாதாரண மனிதனே தன் காதலியை இன்னொருவன் கவர்ந்துவிட்டான் என்று அறிந்தாலே பொறுமையாக இருக்கமாட்டான். அதுவும் அமைச்சராக இருந்த, அடியாட்களோடு அதிகாரத்தில் திளைத்த ஒருவர் அமைதியாக இருப்பாரா? தன்னைப் பற்றிய செய்திகளை மஞ்சள்தனமாய் எழுதியதற்காக மட்டுமின்றி, தன் காதலியையும் கவர்ந்து சென்றதற்காக வும் கோபப்பட்டுத்தான் அந்த அமைச்சரின் ஆட்கள் லியனகேயைக் கடத்திக் காணாமற் செய்திருக்கின்றனர் என அந்த இடதுசாரி சொன்னார்.

வசந்தவுக்கு ஏன் இந்தப் இடதுசாரிகள் எல்லாம், வரவர பிறழ்ந்துபோய் பேசுகின்றார்கள் என நினைக்க அலுப்பு வந்தது. தற்போதைய ஜனாதிபதி கூட ஒருகாலத்தில் இடதுசாரிதான். ஜேவிபியினரை அன்றைய அரசு தேடித்தேடிக் கொன்றபோது அவர்களுக்காய்ப் பேச, ஐநாவின் மனிதவுரிமை அமர்வுகளிலும் கலந்துகொண்டவர். அப்படிப் பட்டவர் இன்று தமிழர்களில் உயிர்களை மட்டுமில்லை, தனக்கெதிராகப் பேசும் சிங்களவர்களைக் கூட சிறைக்கும், விரும்பினால் இல்லாமல் ஆக்குவதுக்கும் தயாராகவே இருந்தார். இவ்வாறு நிலைமைகள் தலைகீழாக மாறும்போது, இந்த இடதுசாரி இப்படிச் சொல்வதைக்கூட சகித்துக்கொள்ளவேண்டும் என்று தனக்குள் சமாதானம் செய்துவிட்டு, லியனகே எதற்காக கடத்தப்பட்டார், அப்படி என்னதான் அவரிடம் இரகசியமாக இருந்திருக்கின்றது என வசந்த மீண்டும் யோசித்துப் பார்க்கத் தொடங்கினேன்..

இதன் நிமித்தம் நூலகம் ஒன்றுக்குப்போய் பழைய பத்திரிகைகளைப் புரட்டிப் பார்த்தபோது சுவாரசியமான ஒரு செய்தி வசந்தவின் கண்களில் தென்பட்டது. லியனகே எதிர்க்கட்சியில் போட்டி யிட்ட இராணுவத்தளபதியின் தீவிர ஆதரவாளர். அந்தத் தளபதி ஜனாதிபதி தேர்தலில் வெல்லவேண்டும் என்று லியனகே விரும்பியிருக்கின்றார். ஆகவே, ஜனாதிபதி தேர்தலின் இரண்டு நாட்களுக்கு முன், தான் கடத்தப்படுவது போல ஒரு நாடகமாடி இருக்கின்றார். அந்த நாடகத்தின் மூலம், நாட்டில் பெரும் கொந்தளிப்பை ஏற்படுத்தி ஜனாதிபதியாக இருப்பவரைத் தோற்கவைக்கலாம் என லியனகேயும் அவரின் நண்பர்களும் திட்டமிட்டிருக்கின்றார்கள். இராணுவத் தளபதி தேர்தலின் வெற்றி பெற்றவுடன் வெளியே வருவதாக இருந்த லியனகே, இராணுவத் தளபதி தோற்றதால் வெளியில் வரமுடியாத நிலை ஏற்பட்டு, தன்னைத்தானே மறைத்து காணாமல் செய்துவிட்டார்.

அது மட்டுமில்லாது லியனகே மிகுந்த வறுமையிலும் இருந்திருக்கின்றார். அவர் இன்னொரு நண்பரிடம் ரூபா முந்நூறைக் கடன் வாங்கி யிருக்கின்றார். தனது போனுக்குச் சார்ஜ் செய்யக் கூடக் காசில்லாது நண்பர்களின் உதவி கேட்ட கதைகளும் இருக்கின்றன. வளர்ந்த பிள்ளைகள் இருக்கும் லியனகே தனது பணநெருக்கடியை ஈடுகட்ட இப்படியான சதிவேலைகளில் இறங்கியிருக்கின்றார். இறுதியில் அது அவருக்கு எதிராகவே திரும்ப, தன்னைக் கடத்தப்பட்டதுபோல நாடகமாகிக்கொண்டு லியனகே வேறு எங்கோ நாட்டில் தலைமறைவாக உலாவிக் கொண்டிருக்கின்றார் என அந்தப் பத்திரிகைச் செய்தி நீண்டது.

இப்படியான செய்தியை அறிந்ததாலோ என்னவோ, ஜெனீவாவில் இலங்கை அரசு, தமிழர்களை இறுதி யுத்தத்தில் படுகொலை செய்யவில்லை என்று நிரூபிக்கச் சென்ற அமைச்சரிடம், லியனகே காணாமற்போனதைப் பற்றி ஒருவர் கேள்வி எழுப்பியபோது, லியனகே காணாமலோ, கொல்லப்படவோ இல்லை. அவர் நம் எல்லோரையும் ஏமாற்றிவிட்டு ஒரு ஐரோப்பிய நாட்டில் தலைமறைவாக இருக்கின்றார். அண்மையில் கூட லியனகே அவரின் மனைவியான நிமாலி யிடம் தொலைபேசியில் பேசியிருக்கின்றார் என்று எவ்வித உறுத்தலுமின்றி அந்த அமைச்சர் சொல்லி யிருக்கின்றார். அந்தப் பொழுதில் லியனகேயின் மனைவி நிமாலி தன் கணவனை எப்பாடுபட்டேனும் உயிருடன் பெறவேண்டும் என்பதற்காக கொழும்பில் சனநெருக்கடி மிக்க தெருவொன்றில் மிகப்பெரிய காளி படத்தை வைத்து, பொலிஸ் நெருக்கடி கொடுக்கக் கொடுக்க ஒரு பூசை செய்திருந்தார்.

வசந்தா இவ்வாறாக லியனகே பற்றிய பத்திரிகைச் செய்திகளைச் சேகரித்தபடியும், தனக்குத் தெரிந்த ஊடக நண்பர்களுக்கு தொலைபேசி அழைத்து விசாரித்தபடியும் இருப்பதைப் பார்த்து நயோமிக்கு இது எங்கே போய் முடியப்போகின்றது என்று சற்றுப் பயம் வரத்தொடங்கியது. ஏற்கனவே தீவிர அரசியலுக்குள் மூழ்கிப்போனவனை ஒருவாறு வெளியில் துடித்துக் கொண்டிருந்த மீனை எடுத்துத் தொட்டிக்குள் போட்டுவிட்டேன் என ஆசுவாசமாய் மூச்சை விட்டுக் கொண்டிருந்தவளுக்கு, வசந்த, லியனகேயின் விடயத்திற்குள் போகவும், என்ன செய்வதென்றும் விளங்காதிருந்தது. பரிதாபமாய் எல்லோரிடமும் நீதியை இரந்து கேட்டுக்கொண்டிருக்கும் நிமாலிக் காக மனமிரங்கினாலும், நிமாலி போல தானும் தனது காதலனை இழந்துவிடக்கூடுமென்ற நினைப்பு அவளுக்கு நெஞ்சை அடைக்கச் செய்தது. ஏற்கனவே வசந்தவின் நண்பர்கள் இலங்கையை விட்டுப்போகும்போது எடுத்துச் சென்ற விடீயோக்கள் சனல் 4இல் ஒளிபரப்பட்டு இலங்கை கொதிநிலையில் பொங்கியும் கொண்டிருந்தது.

ஒருநாள் நயோமியுடன் பொரளைச் சந்தியில் நடந்துகொண்டிருந்தபோது வசந்த அதன் அருகிலிருந்த பஸ் ஸ்டாண்டைச் சுட்டிக் காட்டி, ‘இந்த இடத்தின் வரலாறு தெரியுமா?’ என்றான். சந்தியில் இருந்த பெட்டிக்கடைகளைப் பார்த்துக்கொண்டும், அவற்றில் தொங்கவிடப்பட்டிருந்த பத்திரிகைகளின் தலைப்புச் செய்திகளையும் வாசித்துக்கொண்டும் வந்த நயோமிக்கு வசந்த என்ன கேட்கின்றான் என்பது முதலில் விளங்கவில்லை. ‘என்ன?’ என்றாள். ‘இந்த இடத்தில்தான் 1983இல் ஒரு தமிழனை நிர்வாணமாக்கி பெற்றோல் ஊற்றி நம்மாட்கள் எரித்தார்கள்’ என்றான். சட்டென்று நயோமிக்குக் கடந்தகாலத்துக்கு நீந்திப் போனது போல காடையர்கள் முன் நிர்வாணமாக நின்ற நீண்டகால்களுடைய தமிழனின் புகைப்படம்



நினைவில் வந்துபோனது. 'அன்றே நாங்கள் அதைத் தடுத்துநிறுத்தியிருந்தால் முப்பது ஆண்டுகால யுத்தத்திற்குள் போயிருக்கத் தேவையில்லை' என்றான் வசந்த. 'நம்மைப் போன்ற சாமன்யர்களுக்கு எந்தக் காலத்தில் அதிகாரம் இருந்தது. அதிகாரம் இல்லாது எதைத்தான் தடுத்த நிறுத்தமுடியும்?' எனச் சோர்வுடன் சொன்னாள் நயோமி.

'அதிகாரம் இல்லாதுவிட்டாலும், நமக்குக் கிடைக்கும் வெளிகளில் இருந்து நமது குரல்களை எழுப்பியிருக்க வேண்டும். இப்போது லியனகே கடத்தப்பட்டுக் காணாமல் போனதையும் மௌனமாகப் பார்த்துக்கொண்டிருந்தால் முந்தைய வரலாறு திரும்பவும் வராது என்று எப்படி நம்புவது? கடந்தகாலத்தை மாற்ற முடியாது. ஆனால், நிகழ்காலத்தில் நாம் என்ன செய்துகொண்டிருக்கின்றோம் என்பது எதிர் காலத்துக்கு முக்கியமானது' என்றான் வசந்த.

வசந்த இப்போது என்ன சொல்ல வருகின்றான் என்பது நயோமிவுக்குப் புரியத்தான் செய்தது. அவள் கவலைப்பட்டு, லியனகேயின் விடயத்திலிருந்து தள்ளியிருக்கச் சொல்லப் போகின்றாள் என்பதை உள்ளுணர்ந்துதான் வசந்த இப்படிப் பூடகமாய்க் கதைக்கின்றான் என்பதை விளங்கிக்கொள்ள நயோமிவுக்கு நேரம் அதிகம் எடுக்கவில்லை. 'என்றாலும்...' என இழுத்த நயோமிவை, 'வா நீண்டகாலமாய் எந்த விகாரைக்குள்ளும் போகவில்லை' என இழுத்துக்கொண்டு பொரளைச் சந்தியிலிருந்த விகாரைக்குள் நுழையத்தொடங்கினான் வசந்த.

விகாரைக்குப் போனதற்கு அடுத்தநாள் வசந்த, லியனகே பணிபுரிந்த பத்திரிகை ஆசிரியரைச் சந்திக்கச் சென்றான். அவர் இலங்கை இராணுவத்துக்கும், விடுதலைப் புலிகளுக்கும் நடந்த இறுதிக்கட்டப்போரில் இலங்கை இராணுவம் இரசாயன ஆயுதங்களைப் பாவித்தமை தொடர்பாக லியனகேயிற்கு இராணுவத்தில் உள்ளிலிருந்து சில ஆவணங்களை ஒருவர் எடுத்துக் கொடுத்திருக்கின்றார் என்றார். அதை முன்வைத்து லியனகே கட்டுரை எழுதிக்கொண்டிருந்தபோதுதான் கடத்தப்பட்டிருக்கின்றார் என்று அந்த ஆசிரியர் தான் உறுதிபட நம்புவதாகச் சொன்னார். அவ்வாறு எழுதுவதற்கு லியனகே சில தகவல்களைக் கைபட எழுதி வைத்திருந்ததைக்கூட அந்த ஆசிரியர் வசந்தவிற்குக் காட்டியிருந்தார்.

லியனகே கடத்தப்பட்ட நான்காம் நாள் உடல் ஒன்று நீர்கொழும்பு சதுப்புநிலத்தில் மிதக்கின்றது என்று தகவல் அறிந்து பதற்றத்துடன் சென்று பார்த்ததையும் அவர் ஞாபகப்படுத்தினார். அந்த உடலம் லியனகேயினது அல்ல என்பதை அறிந்தபின் தனக்கு நிம்மதி வந்ததென்றார். 'போர்க்காலத்திலும் போர்க்காலத்தின் பின்னரும் இப்படி வெள்ளைவானில் கடத்தப்பட்டவர்கள் அநேகம் தமிழர்களாக இருக்கையில், ஏன் நம்மைப்போன்ற ஒரு சிங்களவரான லியனகேயைக் கடத்தினார்கள் என்பதுதான் பெரும் புதிராக இருக்கின்றது' என இன்னும் குழப்பினார் அவர்.

இப்படி அந்த ஆசிரியர் சொல்லவும், வசந்தவிற்கு நிச்சயம் லியன்கேவை கடத்தியதற்கு அவரிடம் ஓர் இரகசியம் இருந்திருக்கின்றது. அதை

அறியத்தான் கடத்தியிருக்கின்றார்கள் என்பதும், அதை அறிந்தபின் எங்கேயேனும் கொண்டுபோய் காணாமற் செய்திருக்கின்றார்கள் என்பதும் இன்னும் உறுதியாகியது போலத் தோன்றியது.

வன்னிப்பெரும் நிலப்பரப்பில் இறுதிப்போரை நடத்திய மேன்மை நிறைந்த ஜனாதிபதிக்கு சோதிடத்திலும் மாந்தீரிகத்திலும் நிறைய நம்பிக்கை இருந்தது. போரை நடத்தியபோது சாத்திரம் பார்த்து முக்கிய முடிவுகளை எடுத்தது மட்டுமின்றி, அவரின் ஒவ்வொருநாளும் கூட சோதிடர்கள் வகுத்துக்கொடுத்த நியதிப்படியே நடந்தேறிக்கொண்டிருந்தது. என்னென்ன நேரத்துக்கு தினம் காலையில் எழவேண்டும் என்பதைக்கூட அலாரம் வைத்து எழுப்பக்கூடியவராக ஜனாதிபதி இருந்தார். அதேமாதிரி அவரோ அல்லது அவரது சகோதரர்களோ தமக்கு வேண்டாதவர்களைக் காணாமற்செய்யும்போதும் நல்ல நேரம் பார்த்துத்தான் அவற்றையும் செய்வார்கள் என்ற ஒரு கதையும் நாட்டுக்குள் இருந்தது.

ஜனாதிபதியின் இந்தப் பலவீனத்தை அறிந்து கொண்ட எவரோ ஒருவர் ஜனாதிபதியின் இல்லத்துக்கு மனித சாம்பலை அஞ்சல்களிலும் பொதிகளிலும் அனுப்பத் தொடங்கினார். தற்செயலாக ஒருநாள் அதைத் திறந்து பார்த்த ஜனாதிபதியின் அந்தரங்கச் செயலாளர் பதறியடித்துக் கொண்டு ஓடினார். அந்தச் செயலாளரின் ஓட்டம் பிறகு நாட்டைவிட்டு வேறொரு நாட்டுக்கு அவர் தூதுவராகப் போகும் வரை நிற்கவில்லை. இவ்வாறு ஜனாதிபதியின் பல்வேறு அலுவலக முகவரிகளுக்கு நாட்டின் வெவ்வேறு திசைகளிலிருந்தும் வரத்தொடங்கிய மனித சாம்பலினால் எல்லோரும் பதற்றமடையத் தொடங்கினர். சோதிடர்கள் ஜனாதிபதிக்குக் கெட்டகாலம் தொடங்கிவிட்டது என்பதை அறியத் தொடங்கினர். எனினும் அவரிடம் அதைக் கூறுவதற்குப் பயந்து, சவக்காடுகளிலிருந்து மனித சாம்பலை எடுத்து அனுப்புவரிடம் ஜனாதிபதிக்கான கெட்டசகுனம் இருக்கிறது, விரைவில் அவரை அழிக்கவேண்டுமென எச்சரித்தனர். தமக்கெதிராகப் பேசுபவர்களை எளிதாக இல்லாமற்செய்த ஜனாதிபதியின் சகோதரர்களுக்கோ இப்படி மனிதச் சாம்பலை யார் அனுப்பிக்கொன்டிருக்கின்றனர் என்பதை அறிவதில் தலையிடி வரத்தொடங்கியது. கொழும்பு, கண்டி, மட்டக்களப்பு, திருகோணமலை என பல்வேறு பிரதேசங்களிலிருந்து மனித சாம்பல் அனுப்பப்பட ஒருவர் அல்ல, ஒரு பெரும் கும்பலே இதில் சம்பந்தப்பட்டிருக்க வேண்டுமென எல்லோரும் நம்பத்தொடங்கினர்.

மனிதசாம்பல் தொடர்ந்து வந்துகொண்டிருக்க, ஜனாதிபதியின் உடல் நலமும் கொஞ்சம் கொஞ்சமாக நலியத்தொடங்கியது. அவரது உடலுக்கு ஒன்றுமில்லை, அவர் நிறைய யோசித்துத்தான் அவருக்கு இப்படியாயிற்று என அவரைப் பரிசோதித்த வைத்தியர்கள் சொன்னார்கள். ஜனாதிபதியின் மனைவிகூட கொஞ்சக்காலத்துக்கு இந்த சோதிடர்களை நமது வாசஸ்தலத்திலிருந்து தள்ளிவையுங்கள் என அக்கறையுடன் சொன்னார். ஜனாதிபதியோ தனது உடல்நலம் எக்கேடு கெட்டாலும் பரவாயில்லை, ஆனால், சாத்திரக்காரர்களை ஒருபோதும் வெளியில் விடமாட்டேனென அடம்பிடித்துக்கொண்டிருந்தார்.

தமையனின் உடல்நலத்தில் அக்கறைகொண்ட அவரின் இளைய சகோதரர்கள் தமது ஒற்றர்களை நாடெங்கிலும் அனுப்பத் தொடங்கினர். மனித சாம்பலை, 'நீ யுத்தத்தில் அழித்தவர்களின் சாம்பல் இவை' என எழுதி யார் அனுப்புகின்றார்களென கண்டுபிடிக்க அவர்கள் பாடுபட்டுக்கொண்டிருந்தனர். அவ்வாறு சந்தேக வளையத்தை இறுக்கியபோது, இருந்த நெடும்பட்டியலில் லியன்கேயும் ஒருவராக இருந்தார்.

பட்டியலில் இருந்த ஒவ்வொருத்தரும் விசாரணைக்கு மர்மமான முறைகளில் எதற்கான அழைக்கப்படுகின்றோம் என்றறியாது கடத்தப் பட்டார்கள். அவ்வாறுதான் லியனகேயும் முதன் முதலில் கடத்தப்பட்டிருக்கின்றார். பிறகு அவரது கையெழுத்தை, மனித சாம்பல் வைத்து அனுப்பப்பட்ட கடிதங்களோடு வந்த கையெழுத்தோடு ஒப்பிட்டுப் பார்த்திருக்கின்றனர். அவரது கையெழுத்து அதேமாதிரி இல்லாததால் முதன்முதலில் கடத்தப்பட்டபோது தப்பிவிட்டார். ஆகவேதான் அவரை உயிரோடு அடுத்தநாள் வறக்கப்பொலவில் கண்ணைக் கட்டிக்கொண்டு வந்து இறக்கிவிட்டிருந்தனர்.

இவ்வாறு மனித சாம்பல் ஜனாதிபதி வாசல்தலத்துக்கு பல மாதங்களாக வந்து கொண்டிருந்தாலும், ஜனாதிபதி தேர்தல் அறிவிக்கப் பட்டபின், ஒருநாளிலேயே பலமுறை அவை அனுப்பப்பட்டுக் கொண்டிருந்தது மட்டுமின்றி, ஜனாதிபதியின் சகோதரர்களின் வீடுகளுக்கும் போகத் தொடங்கியிருந்தன. 'முப்பதாண்டுகளாக தொந்தரவு கொடுத்திருந்த கொட்டியாவைக் கூட அழித்துவிட்டோம், ஆனால், இந்த மனிதச் சாம்பல் அனுப்பும் குழுவைத்தான் இன்னும் பிடிக்கமுடியவில்லை' என ஜனாதிபதியின் சகோதரர் ஒருவர் ஐந்து நட்சத்திர விடுதியில் விஸ்கியை அருந்தியபடி கவலையும்பட்டிருக்கின்றார்.

மனித சாம்பலை லியனகே அனுப்பவில்லை என்று முதல் தடவை கடத்தப்பட்டு விடுவிக்கப்பட்டார் என்றால்,ஏன் பிறகு கடத்தப்பட்டுக்காணாமற்போனார் என்று, கிடைத்த விபரங்களை வைத்து ஆராய்ந்த வசந்தவுக்கு ஒரே மர்மமாய் இருந்தது. ஏதோ ஒருமுனையைப் பிடித்து லியனகேயின் கடத்தலுக்கான காரணத்தைக் கண்டுபிடித்துவிடலாம் என நினைத்த வசந்தவிற்கு ஏன் இதற்குள் நுழைந்தேன் என்கின்ற மாதிரியான குழப்பம் வந்தது. தான் சேகரித்த விடயங்களை யாருடனாவது பகிர்ந்துகொள்ளலாம் என்றால் நாட்டின் சூழ்நிலையில் எவரையும் நம்பமுடியாதிருந்தது. இந்தக் கடத்தலை வசந்த இப்படி தீவிரமாகப் பின் தொடர்கின்றான் என்றறிந் தாலே லியனகேயைப் போல வசந்தவையும் அடையாள மின்றிக் காணாமற் செய்ய நிறையக் கரங்கள் காத்துக்கொண்டிருந்தன. எந்த இரகசியம் எனினும் பகிர்ந்தால், வெளியில் போகாது இருக்கக்கூடிய ஒருவர் என்றால் நயோமிதான். ஆனால், அவளுக்கு



இப்படி, தான் தீவிரமாக லியனகேயின் விடயத்தில் இருக்கின்றேன் என்றால், கவலையுறுவாள் எனபதால் அவளோடும் இது குறித்துக் கதைக்க வசந்தவுக்கு தயக்கமாயிருந்தது.

லியனகேவை இரண்டாவது தடவையாக கடத்தியவர்கள் முன்னாள் தமிழ் போராளிகள் என ஒரு தகவல் வசந்தாவுக்குப் பரிமாறப்பட்டது. அவர்கள் இலங்கை இராணுவத்தின் உளவுப்பிரிவால் உள்வாங்கப்பட்டவர்கள் என்றும், ஒரு தமிழ் எம்.பியை நாரஹன்பிட்டியாவில் வைத்துச் சுட்டுக்கொல்வதற்கும் இந்த குழுவினரே பாவிக்கப்பட்டனர் எனவும் சொல்லப்பட்டது. அது உண்மையா இல்லையா என்பதை அறிய வசந்த அவ்வளவு அக்கறை காட்டவில்லை. ஆயுதங்களில்லாத அப்பாவி மக்களையே மனிதாபிமானமின்றிக் கொன்ற ஓர் அரசு அவர்களுக்கெதிராகப் போராடியவர்களை எப்படித் தந்திரமாகப் பாவிக்கும் என்பதையும் வசந்த நன்கு அறிந்து வைத்திருந்தான்.

லியனகேயைக் கடத்திக்கொண்டு போனவர்கள் முதலில் கிரிகெல இராணுவ முகாமுக்குக் கொண்டு சென்றார்கள். லியனகேவுக்கு கடந்தமுறை போல, இம்முறையும் தன்னை உயிரோடு விட்டுவிடுவார்கள் என்று சிறுநம்பிக்கை அவரைத் தலைகீழாகச் சித்திரவதைக்காய்த் தொங்கவிட்டபோதும் இருந்திருக்கின்றது. முதல்கட்ட விசாரணைகள் முடிந்தபின், அவரின் பண்ணைவீடு இருந்த தம்புள்ளவுக்குக் கொண்டு போய், அந்த வீட்டில் சில இடங்களை இராணுவத்தினர் தோண்டிப் பார்த்திருக்கின்றனர். பின்னர் தமிழர்களும் முஸ்லிம்களும் நிறைந்து வாழும் கிழக்கு மாகாணத்துக்கு அவரைக் கொண்டு சென்றிருக்கின்றனர். அக்கறைப்பற்றில் நடந்த விசாரணைகளில் மரணத்தின் வாசனையை நுகர்ந்த லியனகேயின் கடைசிமூச்சு திருகோண மலையின் வாழைத்தோட்டம் ஒன்றில் காவு கொள்ளப்பட்டிருக்கின்றது.

அங்கேதான் கடைசி யுத்தத்தில் சரணடைந்த முக்கியமான போராளித்தளபதிகள் விசாரணைக் குட்படுத்தப்பட்டு ஒவ்வொருத்தராகக் கொல்லப் பட்டதாகவும் சர்வதேச ஊடகம் ஒன்று செய்தி வெளியிட்டிருந்தது. சித்திரவதையினால் மரணமடைந்த லியனகேயை அந்த வாழைத்தோட்டத்துக்குள் புதைத்திருக்கின்றார்கள். ஒன்றிரண்டு நாட்களில் பெய்த பெருமழையினால் இளகிய மண்ணில் லியனகே மிதக்கத் தொடங்க அவரது உடலத்தைப் படகில் கொண்டுபோய் பிறகு நடுக்கடலில் போட்டிருக்கின்றார்கள்.

வசந்த இந்த சம்பவத்தின் ஒவ்வொரு சிறு தகவல்களையும் திரட்டி முழுதாக ஒரு கோர ஓவியத்தை உருவாக்கி விட்டிருந்தான், வேறு எந்தக் காரணத்தையும்விட ஜனாதிபதியின் சகோதரரின் கையிலிருந்த உளவுத்துறையினர், லியனகேயைக் கொண்டுபோய் வாழைத்தோட்டத்தில் புதைத்தமைக்கு லியனகேதான் மனித சாம்பலை அனுப்பிக் கொண்டிருந்தார் என உறுதியாக நம்பியதுதான் முக்கிய காரணமாக இருந்திருக்கின்றது. இந்த நாட்டில் ஆயுதம் தூக்கியவர்களைக் கொன்ற காலம் போய், இப்போது மனித சாம்பலை அனுப்புகின்றார்கள் என்ற சந்தேகத்தின்பேரிலும் கொல்லத் தொடங்கிவிட்டார்கள் என நினைத்த வசந்தவுக்கு நடுக்கம் வந்தது.

லியனகே கடத்தப்பட்டுக் காணாமல் போனதுடன் மனித சாம்பல் அனுப்பப்படுவது நிறுத்தப்பட்டிருந்தது. மேன்மை தாங்கிய ஜனாதிபதி கொஞ்சம் கொஞ்சமாக உடல் நலம் தேறத்தொடங்கியிருந்தார். மனித சாம்பலில்தான் அவரைப் பீடித்திருந்த நோய் இருந்திருக்கின்றதென சோதிடர்கள் சரியாகக் கணித்துச் சொன்னார்கள். மீண்டும் அவர் உற்சாகமாக நடமாடத் தொடங்கினார். ஆனால், அடுத்த ஜனாதிபதி தேர்தலில் எவருமே நம்பமுடியாதளவுக்கு தோற்கடிக்கப்பட்டார். எதற்கெனக் கொல்லப்படுகின்றோம் என்று தெரியாமல் செத்தவர்களின் ஆவிகள் அவ்வளவு எளிதில் அமைதியடைவதில்லை. அவர்களின் பழிவாங்கல்தான் பெரும்போரை வென்று கொடுத்தவரையே அரியாசனத்தில் இருந்து இறக்கியது என்று மக்கள் கிசுகிசுக்கத் தொடங்கினார்கள். ஜனாதிபதி தனது பதவியின் கடைசிநாளன்று வாசஸ்தலத்தை விட்டு வெளியேறியபோது மீண்டும் மனித சாம்பல்பொதி ஒன்று அவரது வீட்டு வாசலுக்கு வந்திருந்தது.

'வீட்டில் மின்னடுப்பு இருக்கும்போது எதற்கு இப்படி விறகுக்கட்டைகளை எரித்து வீணாய்ச் சாம்பலாக்கின்றாய்' என்று நயோமி வசந்தவைப் பார்த்துக் கேட்க அவன் மெல்லிய புன்னகையோடு கடந்துபோனான். இப்போது வசந்தவுக்குத் திருமணமாகி ஒரு மகளும் பிறந்திருந்தாள். நயோமியும் மகளும் தூங்கியபின், விறகால் எரித்த சாம்பலை அஞ்சலுறைக்குள் பத்திரமாக இட்டு, 'மேன்மை தங்கிய முன்னாள் ஜனாதிபதிக்கு, இது உங்களைப் பதவியிலிருந்து இறக்கிப் பழிதீர்த்த லியனகேயின் சாம்பல்' என கணனியின் முன் இருந்து தட்டச்சுச் செய்யத் தொடங்கினான் வசந்த. ●

**"இளங்கோ" <elanko@rogers.com>**

# அம்ருதா ப்ரீதம் கவிதைகள்

பஞ்சாபியில்: அம்ருதா ப்ரீதம் ஆங்கிலம் வழித் தமிழில்: மாலன்

## பரணில் ஒரு புத்தகம்

பரணில் கிடக்கும் ஒரு புத்தகம் - நான்
சட்டமோ சமய சங்கீர்த்தனமோ
காமசூத்திரத்தின் ஓர் அத்தியாயமோ
நெருக்கம் தந்த வலிகளின் தொகுப்போ
இவை எதுவுமல்ல நான்
(அப்படி இருந்திருந்தால் யாரேனும் என்னைப் படித்திருக்கக் கூடும்)

புரட்சியாளர் மன்றம் இயற்றிய
ஒரு தீர்மானத்தின்
கையெழுத்துப் பிரதி நான்
காவல்துறையின் முத்திரை அதிலுண்டு
ஒருபோதும் அது வெற்றிகரமாக அமல்படுத்தப்பட்டதில்லை
சடங்கின் பொருட்டு பாதுகாக்கப்படுகிறது அது



இப்போதெல்லாம்
அலகில் வைக்கோல் ஏந்தி
வருகின்றன சில குருவிகள்
என் மீது அமர்கின்றன
அடுத்த தலைமுறை குறித்துக் கவலை கொள்கின்றன
(எத்தனை அருமையானது,
அடுத்த தலைமுறை குறித்துக் கவலை கொள்வது!)
குருவிகளுக்குச் சிறகுண்டு
தீர்மானங்களுக்கு இல்லை
தீர்மானங்களுக்கு அடுத்த தலைமுறையுமில்லை

எனது எதிர்காலம் என்ன?
அதன் வாசனையைச் சில நேரம்
நான் நினைவில் முகர முயற்சிப்பதுண்டு
கவலைகள் என் கட்டுக்களைத் தளரச் செய்தன
நான் முகர முயலும் போதெல்லாம்
கிட்டியது
பறவைகளிட்ட புழுக்கைகளின் வாசமே

ஓ! என் பூமியே, உன் எதிர்காலம்!
உன்னைப் போல் நான் இன்று



## உறுதிமொழி

என் உள்ளங்கையில் ஓர் உறுதிமொழி
வேதனையின் ரேகைகளால் பொறிக்கப்பட்டிருக்கிறது
நம்பிக்கையின் ரேகைகள்
ஆயுள் ரேகையை விட நீள்கின்றன

என் காதல் எத்தனை காலம் ஜீவிக்கும்
எனக் கேட்கிறாய்
காதலுக்குப் பேசக் கற்றுக் கொடுத்துவிடாதே
ஏனெனில்
அதைக் காது கொடுத்துக் கேட்க
இங்கு யாரும் கற்றுக் கொள்ளவில்லை
சொற்ச் செல்வமின்றி செழிப்பது காதல்

என் உடலின் கருணையில் இருந்து கொண்டிருக்கிறது
என் சுவாசம்
எப்போது வேண்டுமானாலும் நின்று போகும்
ஆனால்
காலத்தின் மார்பில் செதுக்கிய நம் காதலை
ஒருபோதும் அழிக்க முடியாது

லைலாவின் நகலல்ல ஹிர்
மஜ்னுவைப் போன்றவனல்ல ரஞ்ச்சா
காதல் அதன் கதையை மறுபடி சொல்வதில்லை
அதன் ஒவ்வொரு பக்கமும் புதிது, இணையற்றது

விரல் நுனிகளையும்
உள்ளங்கையையும்
துளைத்தன துயரத்தின் அம்புகள்
ஆனால்
கிழிந்து தொங்கும் விளிம்புகளில்
எங்கோ உயிர்த்தெழுகிறது
நம்பிக்கை. ●

**மாலன் <maalan@gmail.com>**

# மெல்பன் வருகை

**நடேசன்**

எனது வாழ்வில் அதிக காலம் மெல்பனில் வாழப்போகிறேன் என அக்காலத்தில் நான் எண்ணவில்லை. மனைவியின் சகோதரர்கள் இருவர் இங்கு இருந்தபோதும் மனைவிகூட அதைப் பற்றிச் சிந்திக்கவில்லை. நாட்டை விட்டு வாழ்வு தேடி ஓடியவர்களில் ஒருவனாக இருந்தேன். ஆனால், என்னையறியாமல் வாழ்வின் பெரும்பகுதி உலகத்தின் சிறந்த நகரங்களில் ஒன்றான மெல்பனில் அமைந்துவிட்டது.

இந்தியாவில் இருந்து வந்து ஒரு மாதகாலம் மட்டும் சிட்னியிலிருந்தோம். எனது மனைவியின் இளைய சகோதரன் ரவி, மெல்பனில் மருத்துவராக இருந்தார். அப்பொழுது அவர் திருமணமாகி இருக்கவில்லை. அவருடன் இருக்கலாம் என்று மனைவியும் மாமா மாமியும் முடிவு செய்தனர்.

யாழ்ப்பாணக் குடும்பங்களில், மாமிமார் எஸ்.பொ.வின்‘சடங்கு’நாவலில்வரும்பாத்திரம்மாதிரி செயல்படுவார்கள். நானும் அவர்களது முடிவுகளை ஏற்று ரவியின் வீட்டிற்குச் சென்றோம். அந்தப் பகுதி சன்சைன் எனப்படும் மெல்பனின் மேற்குப் பிரதேசம். அவ்விடத்திற்கு மெல்பனின் பிரபல்யமான ‘வெஸ்ட் கேட் பிரிட்ஜ்’ எனப்படும் பெரிய பாலத்தைக் கடந்து செல்லவேண்டும்.

இரண்டு அறைகள் கொண்ட ஒரு ஃபிளாட்டில் நாங்கள் நால்வரும் ஒரு படுக்கை அறையில் வாழ்ந்த காலம். இரண்டு பிள்ளைகளும் நடுவே உறங்கினால், இருமருங்கும் நாங்கள் உறங்குவோம். மூன்று வயதில் இருந்த மகள் நித்திரையில் உடல் பயிற்சி செய்ததால் விழுந்த உதைகள், அடிகள் இன்னமும் நினைவில் இருக்கிறது. அந்த ஆறு மாதங்கள் எனது வாழ்வில் முக்கியமானவை.



எமக்கு அக்காலத்தில் ஆங்கிலம் படிப்பதற்காக அவுஸ்திரேலிய அரசாங்கம் உதவிப் பணம் தந்தது. அப்படியிருந்தும் மாமன், மாமி என ஏழு பேர் ஏன் ஒரே வீட்டில் இருந்தோம் என்று இப்போது நினைக்கிறேன். இரண்டு காரணங்கள் இருக்கமுடியும். மீண்டும் நான் அவுஸ்திரேலியாவில் மிருக மருத்துவராகவும் மனைவி குடும்ப மருத்துவராகவும் தகைமையைப் பெறுவதற்கு பரீட்சை எடுக்கவேண்டிய கட்டாயத்தில் இருந்ததால், எங்களது பிள்ளைகளைப் பராமரித்தது மாமா மாமியினர்தான். அக்காலத்தில் அந்த அரச உதவியிலும் எம்மால் சேமிக்க முடிந்தது.

எனது பிற்கால வாழ்வில் பலமான தாக்கத்தை உருவாக்கிய இரண்டு விடயங்கள் மெல்பனில் இருந்தபோது நடந்தன. அவற்றில் முதன்மையானது ஃபூட்ஸ்கிரே என்ற இடத்தில் அமைந்திருந்த தொழில் நுட்பக் கல்லூரியில் - எங்களைப்போல் பல நாடுகளிலும் இருந்து வந்தவர்களோடு சேர்ந்து ஆங்கிலம் படித்தோம். அந்த வகுப்பு ஐக்கிய நாடுகளது சபை போன்றது. எங்களோடு படித்தவர்கள் எல்லோரும் மருத்துவராகவும் மிருக மருத்துவராகவும் இருந்தார்கள்.

எங்களுக்கு கற்பித்த ஆண் அலன், பெண் ஹெலன் இருவரும் பெயர் ஒற்றுமையில் மட்டுமல்ல குணத்திலும் அருமையானவர்கள். மாணவர்களது கற்பனையில் ஆசிரியர்கள் எப்படி இருக்கவேண்டும் என்பதற்கு உதாரணமாகத் திகழ்ந்தார்கள். பல வருடங்கள் அவர்களுடன் நட்பைப் பேணினேன். மிருக மருத்துவராக நான் வேலை செய்த மருத்துவமனையில் தனது பூனையைக் கொண்டுவந்த ஹெலன், என்னைக் கண்டதும் ஒரு ஆசிரியராக அவர் அடைந்த சந்தோசம் இன்னமும் நினைவில் உள்ளது. அவரது பூனையின் பற்களை சுத்தப்படுத்தினேன் என்பதையும் நினைவுகூர்கிறேன்

பிரித்தானிய காலனி ஆதிக்கத்தில் இருந்து வந்த எங்களுக்கு ஆங்கிலம் இலகுவாக இருந்தபோது, சீனா, தென்னமரிக்கா, கிழக்கு ஐரோப்பா, அரேபிய நாடுகளில் இருந்து வந்தவர்கள் அடைந்த சிரமத்தை என்னால் பார்க்க முடிந்தது. பலர் பல தடவைகள் பரிட்சையில் தோற்று தேர்வானார்கள். என்னுடன் படித்த பல அரேபியர்கள், கிழக்கு ஐரோப்பியர்கள் பரீட்சைகளில் தேறமுடியாது டாக்சி சாரதிகளாகவும் தமது மருத்துவத்துறை தவிர்த்து ஏனைய தொழில்களில் ஈடுபட்டதும் மனதிற்கு வருத்தமானவை.

பிரித்தானிய காலனித்துவத்தால் வந்த கிரிக்கெட் போன்று ஆங்கில அறிவும் எமக்கு கிடைத்த நன்மைகள் என்ற கணக்கில் வைக்கப்படவேண்டும். இந்தியா, இலங்கையில் இருந்து அமெரிக்கா, பிரித்தானியாவுக்குச்



சென்றவர்களுக்கு முன்னேற்றத்திற்கு ஆங்கிலம் ஏணியாக உள்ளது. இதுவே பல இந்தியர்கள், அமெரிக்க பல்தேசிய நிறுவனங்களில் முக்கியமடைய பிரதான காரணமாகும்.

மருத்துவ, மிருக மருத்துவ, பல்மருத்துவ துறைகளில் உள்ளவர்களுக்கு, தங்களிடம் வரும் சாதாரண அவுஸ்திரேலியரிடம் எப்படி ஆங்கிலத்தில் பேசுவது என்பதுடன் புதிய கலாச்சாரத்தை எப்படி எதிர்கொள்வது என்பதையும் அறிந்துகொள்வதற்காக நடந்த வகுப்பில் பயின்றவர்களுக்கு, மூன்று மாதத்தின் பின்பாக பரீட்சை நடக்கும். இதில் சித்தியடைந்த பின்பே மற்றைய பரீட்சைக்குப்போக முடியும். அந்தப் பரீட்சைக்கு எங்களைத் தயாராக்குவதே அலன், ஹெலன் ஆகியோரது பொறுப்பு. நாங்கள் வந்த காலத்தில் தொடர்ச்சியாக 12 வருடங்கள் தொழிற்கட்சி மத்தியில் அரசாண்டபோது புதிதாக நாட்டுக்குள் வரும் எங்களைப் போன்றவர்களுக்கு இப்படியாகச் சலுகைகள் இருந்தன. இந்த நாட்டுக்குத் தேவையானவர்கள் என்ற எண்ணத்தை உருவாக்கிய இப்படியான வகுப்புகளும் ஆசிரியர்களும் எம்மை துரிதகதியில் பரீட்சையில் தேறவைத்தன.

இந்தக் காலத்திலே எனது அரசியல் மீண்டும் புத்துயிர்ப்பு பெற்றது.

மெல்பனுக்கு வந்தபோதே நண்பர் சிவநாதனுக்கு கொடுப்பதற்காக சுரேஷ் பிரேமச்சந்திரனது அறிமுகக் கடிதத்தோடு வந்தேன். இக்காலத்தில் அவரே ஈழமக்கள் புரட்சிகர முன்னணியின் சார்பாக இயங்கி வந்தவர். இந்தியாவில் அகதிகள் மத்தியில் வேலை செய்த காரணத்தால் சிவநாதன் ஒரு கூட்டத்தை மெல்பன் வை.டபிள்யூ. சி.ஏ. மண்டபத்தில் ஒழுங்கு பண்ணியிருந்தார். அதுவே அவுஸ்திரேலியாவில் எனது முதல் சமூகச் செயல்பாடு.

மெல்பனில் மழைச்சாரல் போர்த்திய குளிர்காலம். மாலை ஆறு மணியளவில் நண்பர் சிவநாதனது காரில் வந்திறங்கியபோது இருட்டாகிவிட்டது. வீதியோரமாக நடந்தபோது எனது காலின் கீழ் மாப்பிள் இலைகள் சலசலத்தன. நான் பேசவிருந்த இடம், அதனைக் கேட்பவர்களது நோக்கம் தெரியாததால் கால்கள் பின்ன தயங்கியவாறு நடந்தேன். போட்டிருந்த உள்ளாடை, சேட், அதன் மேல் கம்பளி உடை என்பவற்றை மீறிய குளிர். கைவிரல் நுனிகளில் பத்து ஊசிகள் குத்தியதுபோல் விறைத்தது. உள்ளே சென்றதும் வெளியே உள்ள நிலைக்கு மாறாக அந்த மண்டபம் சூட்டில் கணகணத்தது. கிட்டத்தட்ட 40 இலங்கைத் தமிழர்கள் வந்திருந்தார்கள். நான் மூன்று வருடமாக இந்தியாவில் அகதிகளுடனும் இயக்கத்தவர்களுடனும் சென்னையில் வேலை செய்த வரலாற்றைக் கூறிவிட்டு, “உங்களைப் போல் ஈழ விடுதலையை நேசித்தவர்களில் நானும் ஒருவன். ஆனால், இந்தியாவின் இராணுவம் இலங்கைக்குப் போகவிருப்பதால் இனிமேல் தமிழராக நாம் செய்வதற்கு அதிகமில்லை. ஈழப் போராட்டம் என்பது எம்மைக் கடந்து போய்விட்டது. தற்போதைய நிலையில் எங்களால் முடிந்தது அகதிகளின் துயர் துடைப்பதே.” எனது கர்ச்சீப்பை எடுத்துக் காட்டி, கண்ணீரைத் துடைப்பதுபோன்ற செயலாக இருக்குமென்றேன்.

அதுவரையும் அமைதியாக எனது பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தவர்களில் இருவர், “நீர் எப்படிச் சொல்ல முடியும்? உமக்கு என்னதெரியும்? நீர் விடுதலைப்புலிகளுக்கு எதிரானவர்” எனப் பேசினார்கள். அந்தக் கூட்டத்தில் இருந்த பெரும்பான்மையினர் எனது கூற்றை ஆதரித்தார்கள் என்று சொல்லாவிடிலும், எதிர்க்கவில்லை. இந்தக் கூட்டம் நடந்த காலம் 1987 ஜூலை நடுப்பகுதி. இந்திய இராணுவம் இலங்கைக்குச்

சென்றதுஜூலைஇறுதிப்பகுதியில்.இப்படிஉறுதியாகச் சொல்வதற்கு என்னால் எப்படி முடிந்தது?

நானும் மனைவியும் இந்தியாவில் இருந்த காலத்தில் எமது இந்திய விசாவை மூன்று வருடங்களாகப் புதுப்பிக்கவில்லை. இலங்கைப் பாஸ்போட்டில் ஒருவிதமான அஜாக்கிரதை இருந்தது. அவுஸ்திரேலியாவுக்கு வருவதற்கு விசா கிடைத்தபோதுதான் அதன் முக்கியத்துவம் தெரிந்தது. விசா இல்லாமல் இருந்தால் இந்தியாவில் இருந்து எக்சிட் விசா கிடைக்காது. ஓடிவிழுந்து புதுப்பிக்க நினைத்தபோது இந்தியாவின் பிரோக்கிரசி பயமுறுத்தியது. எனது கவலையை அறிந்து அக்காலத்தில் என்னோடு அடிக்கடி தொடர்பில் இருந்த இன்ரலிஜன்ட் பீரோவைச் சேர்ந்த தமிழர் ஒருவர் அதை ஒரே நாளில் செய்து தந்தார்.

இந்திய உளவுத்துறையினர் இயக்கங்களில் முக்கியமானவர்களுடன் மட்டுமல்ல என் போன்றவர் களுடனும் தொடர்பு வைத்திருப்பார்கள். அவை எந்தவொரு நிபந்தனையுமற்ற தொடர்புகள். அவுஸ்திரேலியாவுக்குப் போவதை வாழ்த்திய அவர், "இந்திய இராணுவம் இலங்கைக்குள் இறங்கத் தயாராக இந்தியக் கடற்கரையில் காத்திருக்கிறார்கள். இனிமேல் உங்களுக்குப் பிரச்சினையில்லை. எங்கள் நாட்டில் உள்ள ஈழ அகதிகளும் படிப்படியாக போய்விடுவார்கள். இதுவரையும் இங்கிருந்து செய்த சேவை போதுமானது. அவுஸ்திரேலியாவுக்குச் சென்று குடும்பத்தைப் பாருங்கள்" என்றார்.

அவர் எனக்குச் சொன்ன விடயங்கள் நடந்திருக் கலாம். ஆனால், எமக்கு நாமே குழியைக் தோண்டி, நாங்களே எம்மீது மண்ணைப்போடுவதற்கு சத்தியப் பிரமாணம் செய்தால் யார்தான் என்ன செய்ய முடியும்? உதவிக்கு வந்தவர்கள் வேடிக்கைதானே பார்க்கமுடியும்?

அந்தச் சந்திப்பின் பின்பாக பல விடயங்கள் நடந்தன. அக்காலப் பகுதியில் எனக்கு முன்னர் இலங்கையிலிருந்து முருகபூபதி வந்திருந்தார். விடுதலைப்புலிகள் ஆதரவாளர்கள் மிகவும் வேகமாகச் செயல்பட்டு இந்தியாவிற்கு எதிரான பிரச்சாரத்தை தொடங்கியதால் கிட்டத்தட்ட நண்பர்கள் 12 பேர் சேர்ந்து ஒரு கையெழுத்துப் பத்திரிகையை உருவாக்க முயன்றார்கள். அதற்கான முதல் ஆலோசனைக் கூட்டம் நண்பர் திவ்வியநாதனின் கிளேய்டன் வீட்டில் நடந்தது. அந்தப் பத்திரிகையில் சிலர் கூட்டுப் பொறுப்பாக இருந்தாலும் அதன் சுமை முருகபூபதியின் தோளில் விழுந்தது. மக்கள் குரல் என்ற அந்தப் பத்திரிகை வெளியானதும் விடுதலைப்புலிகளுக்கு எதிரான ஒரு குழுவாக எங்கள் மீது அழுத்தமான முத்திரை இடப்பட்டது. இந்தப் பன்னிரண்டு பேரும் இலங்கையில் ஜே.ஆர். - ராஜீவ்காந்தி ஒப்பந்தத்தால் சமாதானம் வரவேண்டுமென்று நினைத்தார்கள். அந்தப் பன்னிருவரும் எனது நண்பர்கள். ஆனால், அந்தப் பத்திரிகையில் எனக்கு எந்தப் பங்குமில்லை.

இக்காலத்தில் மட்டும் மெல்பனில் இலங்கைத் தமிழர்கள் கிட்டத்தட்ட 300 பேரளவில் அகதிகளாக விண்ணபித்துவிட்டு பல வருடங்களாகக் காத்திருந்தார் கள். அதில் பலர் எங்கள் நண்பர்களாகவும் இருந்ததால் சட்டத்தரணி ரவீந்திரனது உதவியால், 'அவுஸ்திரேலியத் தமிழ் அகதிகள் கழகம்' என்ற பெயரில் ஒன்று அமைப்பு உருவாகியது. இதனது உருவாக்கத்தில் அதன் ஆரம்பக் கூட்டத்திலே மட்டும் நான் பங்குகொண்டேன். ஆனால், இந்தக் கழகமும் 'மக்கள் குரல்' போல் விடுதலைப்புலிகளுக்கு எதிரானதாகவே பார்க்கப்பட்டு இதில் சேர்ந்தவர்கள் அக்காலத்தில் இங்கு இயங்கிய இலங்கைத் தமிழ்ச் சங்கத்தினரால் துரோகிகளாக வர்ணிக்கப்பட்டார்கள். வானொலிகளை நடத்தி எதிர்பிரசாரங்களை முன்னெடுத்தார்கள்.

மெல்பனில் தமிழர்கள் சம்பந்தப்பட்ட எந்த முயற்சிகளையும் விடுதலைப்புலிகள் ஆதரவாளர் களோடு இணைந்தே எடுக்கவேண்டும் என்ற நிலைப்பாடு எழுதாத சட்டமாகியது. மற்றவர்கள் தமிழர் சம்பந்தமாக ஏதும் செய்ய முயன்றால், அதனைத் துரோகச் செயலாகப் பார்க்கவேண்டும் என்ற மன நிலையை பரப்ப முயன்றார்கள். இதனால் கோயில்கள் பிரிந்தன. நண்பர் மாவை நித்தியானந்தன் பிற்காலத்தில் சுயாதீனமாக பாரதி பள்ளியை உருவாக்கினார்.

தீவிர புலி ஆதரவாளர்கள் சமூகவிடயங்களில் மட்டு மல்ல தமது கருத்துக்கு எதிரானவர்களது தனிப்பட்ட தொழில் சார்ந்த சட்டத்துறை, மருத்துவத்துறை பணிகளையும் மௌனமாகவும் வெளிப்படையாகவும் பகிஷ்கரித்தார்கள். இவற்றால் பயந்த பலர் ஊரோடு ஒத்துவாழ்தல் என்ற பழக்கத்திற்கு அடிமையாகி, சூழ்நிலையின் கைதிகளாயினர். ஆமாம் சாமிகளாக தலையாட்டினர்.

1988 ஜனவரியில் நான் மேல்படிப்புக்காக தெரிவு செய்திருந்த நியூ சவுத்வேல்ஸ் பல்கலைக்கழகம் என்னை அழைத்ததால் குடும்பமாக சிட்னி சென்றேன். அதுவரையில் நான் மெல்பனில் செய்த மிகவும் சிறிய பணிகளையும் அரசியலாகப் பலர் பார்த்தனர். பலர், "உங்களது வேலையையும் குடும்பத்தையும் பாருங்கள்" எனப் புத்திமதி சொல்வார் கள். ஆனால், எனது பணிகள் யாவும் தன்னியல்பாகவே நடந்தவை.

சிறுவயதிலேயே வன்முறை எனக்கு அன்னிய மானது. இலங்கையில் இருந்து வன்முறைக்குத் தப்பி இந்தியாவிற்குச்சென்றநான், எமது நாட்டு இயக்கத்தினர் மத்தியில் நடந்த ஆட்கடத்தல், கொலைகளைப் பார்க்க நேர்ந்தது. அவற்றில் ஏதாவது நல்ல நோக்கமிருக்கலாம் என்ற ஆரம்பக்கட்ட நினைவுகள் பிற்காலத்தில் அடிபட்டுப்போனது.

ஏதாவது வழிமுறையில் இந்த வன்முறைப் போராட்டம் நிறுத்தப்பட வேண்டுமென்பதே எனது அடிமனதின் விருப்பம். இலங்கை - இந்திய ஒப்பந்தத்தை வரவேற்றதும் அந்த விருப்பத்தில் ஒன்று. இதனாலேயே அதற்காக ஆத்மார்த்தமாக இயங்கிய எனது நண்பர்களுடன் ஒன்றிணைந்தேன்.

எனது வாழ்நாளில், யாழ். இந்துக் கல்லூரி மாணவர் பிராயத்தில் ஓரிரு தடவைதான் கல்லூரிக்கு தாமதமாகச் சென்றதனால் ஆசிரியர்களிடம் பிரப்பம் பழம் வாங்கியிருக்கின்றேன். அங்கு நான் செல்லும் சைக்கிளில் காற்றுப்போயிருந்தால் ஏற்படும் தாமதங்கள்



ராஜீவ் - ஜெயவர்த்தனே ஒப்பந்தம்

தான் அவை. எல்லோருக்கும் அந்த இளம் பருவத்தில் கிடைக்கும் பிரப்பம் பழங்கள்தான்.

கல்லூரியில் எந்தப் பெரிய காரணமுமில்லாமல் அடித்தார்கள். ஒருமுறை சில நிமிடங்கள் தாமதித்ததற்கும் மறுமுறை பாடசாலைக்கு போகாமல் ஹஸ்டலில் நின்றதாலும் கிடைத்தவை. அச்சம்பவங்கள் என்னில் பெரிய மாற்றங்களை ஏற்படுத்தவில்லை. அவை அக்காலத்திலே நியாயமற்றதாகவே தெரிந்தன. ஒரு தடவை எனது தந்தையிடம் வாங்கியிருக்கிறேன். அதற்கப்பால் நான் எனது தம்பிகளுக்கு ஓரிரு முறை பாடசாலைபோகுமாறு அடித்ததும், எனது மகளுக்குச் சிறுவயதில் கையை ஓங்கியதும்தான் நினைவில் இருக்கிறது. ஒருசமயம் எனது பூனை, குருவியை பிடித்ததற்காக அதனை பத்திரிகையால் அடித்திருக்கின்றேன்.

இவ்வாறு மிகக் குறைந்த அளவிலேயே வன்முறையை பிரயோகித்திருக்கின்றேன். அப்படியான வன்முறைகளுக்காக இப்பொழுதும் வருந்துகிறேன்.

எனது ரீன்ஏஜ் வயதில் பாடசாலைக்கு செல்லும் போது காசைக் கொடுத்த அம்மா மருந்து வாங்கி வரும்படி கூறியிருந்தார். அக்காலத்தில் கிளினட் ஈஸ்ட் வூட்டின் ஒரு ஆங்கிலப்படம். பெயர் நினைவில்லை. அதுவே கடைசி நாளாக இருந்தது. வெள்ளிக்கிழமை, விலங்கியல் ஆசிரியர் பிரான்சிஸ் வராததால் வகுப்பில்லை. அவர் வராது விட்ட பாடங்களை பின்பு அழைத்து ஓல்ட் பாக்கருகே நடத்துவார் என்பதால் பாடத்தை தவறவிடவில்லை. திரைப்படத்திற்கும் அதுவே கடைசி நாளாக இருந்தது. கிட்டத்தட்ட பத்துப்பேர் கூட்டமாக இந்துக் கல்லூரியில் இருந்து படம்பார்க்கச் சென்றோம். கலரி வரிசையில் படம் பார்த்தால் ரோயல் டிஸ்பன்சரியில் மருந்து வாங்க மிச்சமிருக்கும் என்பது எனது கணக்கு. தியேட்டரில் கலரி சீட்டுகள் முடிந்துவிட்டது. முன்வைத்த காலை பின்வைப்பது கௌரவக்குறைவாகத் தெரியும். அம்மாவிற்குத் தேவைப்பட்ட மாத்திரைகளை மீண்டும் மீண்டும் மனதில் நாட்கணக்குப் போட்டபோது மொத்தமாக வாங்க முடியாத போதிலும் சொற்ப மாத்திரைகளாவது வாங்கலாம் என தீர்மானித்து இரண்டாவது வகுப்பில் படம் பார்த்துவிட்டேன்.

ஆனால், ரோயல் டிஸ்பன்சரியில் மாத்திரைகள் ஒரு டப்பியில் இருப்பதால் உடைத்துத் தர மறுத்து விட்டார்கள். என்னுடன் வந்த நண்பர்கள் ஏற்கனவே போய்விட்டார்கள். கடன் தர யாருமில்லை. சோகத்துடன் வந்த என்னிடம் வீட்டில் கேட்டபோது நடந்ததைச் சொன்னேன்.

'பரதேசியைப் பிள்ளையாகப் பெற்றிருக்கிறாய். மருந்து வாங்கக் கொடுத்த பணத்தில் நீகல் தியேட்டரில் ஆங்கிலப் படம் பார்த்துவிட்டு வந்திருக்கு. உருப்படாது." அம்மாவைத் திட்டி, எனக்கு அடி விழுந்தபோது கொடுமையே உருவான தமிழ்ப்பட வில்லனாக எனது தகப்பனை நினைத்து வீட்டைவிட்டு ஓட நினைத்தேன். ஆனால், எங்கே ஓடுவது எனத் தீர்மானிக்கவில்லை. அந்தநேரத்தில் எனது மூளையின் எமோஷனல் நடுப்பகுதி ஓய்வு பெற்றதும், மூளையின் பகுத்தறியும் முன்பகுதி விழித்துக்கொண்டது. 'அட மடையா, படித்து ஒரு மனிதனாக வரவேண்டும். இதையெல்லாம் சகித்துப் போகவேண்டும். ஏற்கனவே பாடசாலையில் பிரச்சினை பண்ணிவிட்டு, பாடப்புத்தகங்களைக் குளத்தில் எறிந்துவிட்டு பிரித்தானிய ஆர்மியில் சேர்ந்த சின்னத்தம்பியின் மகனாக இருக்கிறாய். எது செய்யக்கூடாது என்பதற்கு உன் தகப்பனே முன்னுதாரணமாக இல்லையா?'

எனது தம்பிக்கு சரியாகக் காலை எட்டுமணிக்கு வயிற்றுவலி வரும். நாங்கள் நால்வரும் எழுந்து பாடசாலைக்கும் கல்லூரிகளுக்கும் ஒன்பது மணிக்கு முன்பே போய்விடுவோம். அதன் பின்பு வயிற்றுவலி குணமான தம்பி எழுந்து தேவையான காலை உணவை சாப்பிடுவான். இந்த எட்டுமணி வலி பாடசாலைக்கு போகும் நேரத்தில் வருவதும், பின்பு ஒரு மணி நேரத்தில் போய்விடுவதையும் ஏற்காமல், அவனை இழுத்தும் அடித்தும் பாடசாலைக்கு கொண்டு சென்றதால் எதுவித பிரயோசனமும் இருக்கவில்லை. என்ன காரணம் என நாங்கள் விசாரிக்கவுமில்லை. விசாரித்திருந்தால் ஏதாவது தெரிந்திருக்கும். அவனை நான் அடித்ததாலேயே படிப்பை பிற்காலத்தில் வெறுத்திருக்கலாம். பிற்காலத்தில் அவனது உளப்போக்கை அறிய முற்படவில்லை என்பதாக நினைப்பேன்.

மெல்பனில் வழக்கமாக மாலையில் வீடு திரும்பும்போது வீட்டுக்கு முன்பாக உள்ள சீமெந்துத் தரையில் பறவைகளின் இறகுகள் கிடக்கும். அந்த இடங்களில் சிறிய கறுப்பு எறும்புகள் ஊர்ந்தபடி இருக்கும். யார் இந்தப் பறவைகளின் கொலையாளி எனத் தெரிந்தாலும் கையும் களவுமாகப் பிடிக்கக் காத்திருந்தேன். வழக்கத்தைவிட ஒரு நாள் நேரத்தோடு வேலை முடிந்து வீடு திரும்பும்போது மாலை நான்கு மணியிருக்கும். எனது பூனை ராணியின் வாயிலிருந்து இரத்தத்துளிகள் நிலத்தில் சொட்ட, வாயில் தேன் குருவியிருந்து துடித்தது. மற்றைய நாட்களில் கொலை நடத்த இடத்தில் பறவையின் உடல் உண்ணப்பட்டுவிடும். இரத்தத்தை எறும்புகள் சுத்திகரித்துவிடும். இன்று கொலை நடக்கும்போது வந்ததால் கையில் இருந்த பத்திரிகை சுருளால் தலையில் தட்டினேன். பறவையை விட்டுவிட்டுச் சென்ற ராணி அன்று தொடக்கம் என்னருகே வந்ததில்லை.

மனிதர்களில் மட்டுமல்ல, மிருகங்களிலும் வன்முறையான எந்த நடவடிக்கையும் எந்த முடிவையும் ஏற்படுத்தாதது மட்டுமல்ல,எதிர்விளைவையே உருவாக்கும் என்பதை சொந்தவாழ்விலும், சமூகவாழ்விலும் கண்டுகொண்டேன்.

இலங்கைப் போராட்டத்தில் இரண்டு பக்கத்திலும் தொடர்ந்த வன்முறையை உள்நாட்டில் பார்த்தோ அனுபவிக்காமலோ எவருமே இருக்கமாட்டார்கள். குறைந்தபட்சம் நண்பர்களோ, உறவினர்களோ பாதிக்கப்பட்டோ பலியாகியோ இருந்திருப்பார்கள்.

நான் இயக்க வன்முறைகளை தமிழ்நாட்டில் பார்த்தேன். ஆயுதம் தாங்கியவர்கள் தங்கள் பாதுகாப்பு, தங்கள் நோக்கங்கள் அல்லது தலைவரது கட்டளையென விளக்கம் சொல்வார்கள். நாங்கள் அதை நியாயப்படுத்த முடியாத போதும் வன்முறையின் சூழ்நிலைகளைப் புரிந்து கொள்ளமுடியும். வெளிநாட்டில், அதுவும் ஜனநாயக நாடுகளில் வாழ்ந்து, அதனது சுகங்களையும் போகங்களையும் அனுபவித்துக்கொண்டு, இலங்கையில் வன்முறையைத் தூண்டியவர்களுக்கு ஆதரவு வழங்கி, அந்த வன்முறையாளர்களின் கொலைகளையும் நியாயப்படுத்தியபடி மேலும் மேலும் ஆயுதத்திற்கு எந்தக் கேள்வியும் இல்லாது பணம் கொடுத்து வந்தார்கள். நூற்றுக்குத் தொண்ணூறு வீதமானவர்கள் வழங்கிய பணத்தால் ஈழவிடுதலையை தாங்கள் பெறமுடியுமென நினைத்தார்கள்.

இயக்கங்களில் இருப்பவர்கள் செய்யும் கொலைகள் குறைந்தபட்சமாக, அவர்கள் சார்ந்த இயக்கத்திற்காகவே அதன் கட்டளைப்படி செய்கிறார்கள். ஆனால், புலம் பெயர்ந்து வாழும் இவர்கள் எந்த நிர்ப்பந்தமுமற்றவர்கள், சுதந்திரமானவர்கள். ஆனால், அந்தக் கொலைகளுக்கு உடந்தையாக இருந்தவர்கள் என்பது உண்மையைத் தவிர வேறொன்றுமில்லை. தற்கால இஸ்லாமியத் தீவிரவாதிகளுக்கு உதவி செய்பவர்களுக்கு நடப்பது போல் மேற்கு நாடுகள் செய்திருந்தால் நகரச்சிறைகள் தமிழர்களால் நிறைந்திருக்கும்.

இந்த நிலையில்1987 ஜுலையில் போரை நிறுத்தி, குறைபட்சமான தமிழர்களது உரிமைகளைப் பெற்றுக் கொடுக்க இருந்த இலங்கை - இந்திய ஒப்பந்தத்தை ஆதரித்த எனது நண்பர்கள் பன்னிருவர் எவ்வளவு தீர்க்கதரிசனமாக செயல்பட்டார்கள் என்பதை நான் நினைத்துப் பார்க்கிறேன்.

30 வருடங்கள் எம்மைக்கடந்து போய்விட்டன. அதன்பிறகு நடந்த கொலைகள் அழிவுகளுக்கு யார் பொறுப்பு? அக்காலத்தில் உருவான வடக்கு - கிழக்கு இணைப்பு இன்று போய்விட்டது என்பது மிகவும் சோகமான வரலாறு.

சங்கிலியனுக்கு நல்லூரில் சிலை திறந்தார்கள் தமிழரசுக் கட்சித் தலைவர் செல்வநாயகத்திற்கு சிலை வைத்தார்கள். உண்மையில் இலங்கைத் தமிழர் தற்போது கொள்கை ரீதியாக அனுபவிப்பது எல்லாம் இந்தியப் பிரதமராக இருந்த ராஜீவ் காந்தியால் கிடைத்தவைதான். நாங்கள் சிலை வைக்கவேண்டிய ஒரே தலைவர் ராஜீவ் காந்திக்குத்தான் என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம்.

நான் நியூ சவுத்வேல்ஸ் பல்கலைக்கழகத்தில் பயோரெக்னோலஜி படிப்பைத் தொடங்கிய போது, குடுப்பத்தினரில் இருந்து விலகி பல்கலைக் கழகத்திற்கு அருகாமையில் நண்பர்களுடன் இருந்தேன். அந்த இடத்திற்கும் சிட்னியின் கூஜி கடற்கரைக்கும் இடையில் அதிக தூரமில்லை.என்னோடு இருந்தவர்கள் என்னிலும் பார்க்க குறைந்தது ஐந்து வருடங்கள் இளையவர்கள். ஒவ்வொருவரும் தலா 25 டொலர் வாரம் ஒருமுறை தந்து ஒரு நாளுக்கு ஒருவராக சமைத்து சாப்பிடுவோம். ஏற்கனவே சமையலில் தேர்ச்சியிருந்ததால் எனது சமையலுக்கு அதிக வரவேற்பு இருந்தது.

பேராதனை பல்கலைக்கழகத்தில் படிப்பை முடித்து சரியாக பத்து வருடங்கள் பின்னர் சிட்னி பல்கலைக் கழகத்தில் சேர்ந்தேன். பேராதனையில் படித்தபோது முதலாம் தலைமுறை கம்பியூட்டர் என ஏயார் கண்டிசன் அறையில் வைத்திருந்த மிருகத்தை தூர இருந்து கண்ணாடிக்கூடாக பார்த்த நினைவுகளுடன் இருந்த எனக்கு, நடிகை சிலுக்கு மாதிரி வழுவழுப்பான மக்கின்ரோஸ் எனப்படும் அப்பிள் கம்பியூட்டரில் எனது ஆராய்ச்சிகளைப் பதிவு செய்யவேண்டும்.



நியூ சவுத் வேல்ஸ் பல்கலைக்கழகம்

நல்லவேளையாக ஹொங்கொங்கில் இருந்து வந்த ஒருவன் எனக்கு நண்பனாக வந்தான். அவன் மூலமாக சில அடிப்படைகளை அறிந்துகொண்டேன். அவன் சீனாக்காரனாக இருந்தாலும் மிகவும் பக்தியுள்ள கிறிஸ்தவன். எனது நாத்தீகத்தில் எரிச்சலடைந்து உதவியை நிறுத்திவிடுவான். அடுத்த நாள் மீண்டும் வந்து சொல்லித் தருவான்.

அக்காலத்தில் நடந்த சில விடயங்களை இரைமீட்கும்போது எனக்கு சுவாரஸ்யமாக இருக்கும். என்னோடு படித்த மலேசிய சீனப் பெண் என்னைத் திருமணமாகாதவன் என நினைத்து அடிக்கடி பல இடங்களுக்கு இழுப்பாள். மதியங்களில் என்னுடன் சுற்றித் திரிவாள். ஒரு நாள் பரிசோதனைச் சாலையில் மைக்கிரஸ்கோப்பை பார்த்துக் கொண்டிருந்தபோது சூடான மூச்சை என் முகத்தருகே படரவிட்டவாறு காதுக்குள், “என்னைப் பிடிக்கிறதா?” என்றபோது என் இதயம் துடிப்பை நிறுத்தியது.

இரத்தம் முழுவதும் உடலை விட்டு வெளியேறியது மாதிரியான உணர்வுடன், “திருமணமாகி இரண்டு பிள்ளைகள்” என்றேன்.

“எங்கே உன் மோதிரம்?” என்றாள்.

“எனது மிருகவைத்தியத்தொழிலில் பலஇடங்களில் கை வைப்பதால் மோதிரம் போடமுடியாது. அதுவே பழக்கமாகிவிட்டது” எனச்சொன்னபோது அவளது தங்கமுகம் தாமிரமாகிப் போனது இன்னமும் நினைவில் உள்ளது. பிற்காலத்தில் தொடர்ச்சியான நட்பைப் பேணினாள். அவளுக்கு என்மேலிருந்த விருப்பத்தைவிட அவுஸ்திரேலியாவில் நின்றுவிடவே விருப்பம் என்பதை அறிந்தேன்.

நான் இருந்த வீட்டில் இருந்தபோது சில சம்பவங்கள் சுவையானவை. நாங்கள் நான்குபேர் இருந்தது மாடி வீடு. அதற்கு முன்பாக ஒரு பெரிய மதுச்சாலையிருந்தது. மேல்தளத்தில் இருந்த நாங்கள் எல்லோரும் இலங்கையைச் சேர்ந்தவர்கள். கீழே இருப்பவர்கள் ஆண்களும் பெண்களுமாக அவுஸ்திரேலியாவின் நாட்டுப்புறத்தில் இருந்து வந்தவர்கள். இதில் ஒரு இளைஞர் இருபது வயதுக்கு மேல் இராது. பார்ப்பதற்கு ஆண்களின் உடைக்கான மொடல் போல் இருப்பான். ஆறடிக்கு மேல் உயரமானவன். கருத்த தலைமயிர். ஒவ்வொருநாளும் “குட்டே” என்பான். எனக்கு “குடேயா” எனக்கேட்டது. அதனால் நான் அவனுக்கு குட்மோர்ணிங் சொல்வேன். அவனது “குட் டே”யை புரிந்துகொள்வதற்கு எனக்கு பல நாட்கள் சென்றது. இருவரது பெயர்களையும் பிற்காலத்தில் பரிமாறிக்கொண்டோம். ஒருநாள் காலையில் எனது பெயருக்கு ஒரு கடிதம் கடந்தது. அதை எடுத்துப்படித்தபோது மதுச்சாலைக்கு மாலை ஆறுமணிக்கு வரும்படி எழுதப்பட்டிருந்தது. அதைப் பார்த்தபோது எனக்கு கொஞ்சம் வித்தியாசமாக

இருந்ததால், எனது நண்பர்களிடம் கேட்போது, "நடேஸ் அவன்கள் 'கே'. நீ அங்கே போகாதே" என்றார்கள்.

ஓரினக்காரர்களின் கவர்ச்சிக்கு நான் ஆட்பட்டது அவமானமாக இருந்தது. பின்பு யோசித்தபோது, 34 வயதில் தனித்திருப்பதால் அப்படி எண்ணிவிட்டானோ என நினைத்தேன். பதின்ம வயதிற்கு மேல் தனித்திருந்தால் இப்படியான எண்ணங்கள் மற்றவர்கள் மனங்களில் வரும்போலும்! நமது ஊர்களில்போல் தங்கைமார் திருமணத்திற்காக காத்திருப்பதோ அல்லது குடும்பத்திற்காக இருப்பதாகவோ இங்கு எண்ணமாட்டார்கள்.

கோடைகாலத்தில் ஒரு நாள் பல்கலைக்கழகம் போகவில்லை. நான் மட்டுமே தனித்து மதியத்தில் வீட்டில் சாரம் அணிந்தவாறு படித்தபடி இருந்தேன். தொடர்ச்சியான படிப்பு போரடித்தபோது வீட்டின் பின்பகுதியில் கிடந்த வூமன் வீக்லி, பிளேபோய் எனப் பலதரப்பட்ட சஞ்சிகைகளில் ஒன்றை எடுத்துப் பார்ப்போம் எனப் பின்புறக்கதவைத் திறந்தபடி வந்தபோது வீசிய காற்றினால் பின்கதவு பூட்டிக் கொண்டது. மீண்டும் உள்ளே செல்ல முடியாமல் தயங்கி நின்றேன். அறை நண்பர்கள் வருவதற்கு குறைந்தது நான்கு மணிநேரமாவது காத்திருக்க வேண்டும். அல்லது கீழே சென்று மேல்மாடிக்கு குழாயைப் பிடித்தபடி ஏறவேண்டும். மேல்மாடிக்கு ஏறுவதற்கும் தயக்கம். உள்ளாடை அணியாத லுங்கியுடன் இருந்தேன். கீழ் வீட்டில் பல மாணவிகள் இருந்தார்கள் என்ன செய்வது?

நமது ஊர்ப்பழக்கத்தில் சாரத்தை கொடுக்காக கட்டிப்பார்த்தேன். சிங்கப்பூரில் வாங்கிய வழவழப்பான சாரம் இடுப்பில் நிற்பதே கடினம். கொடுக்காக அது நிற்கவில்லை. கீழே காத்திருந்தபோது ஒரு பெண் வந்து பார்த்து, "எப்படி?" என சாதாரணமாகக் கேட்டாள். அவளுக்கு ஒன்றுமில்லை எனச் சொன்னேன்.

அவர்கள் வீட்டு யன்னல் அருகே மணிக்கணக்கில் நிற்கமுடியாது. என்னை வித்தியாசமாக நினைத்து விடுவாள். ஒரே வழி உண்மை பேசுவது. எனது நிலமையை அந்தப் பெண்ணிடம் சொன்னேன். சிரித்தபடி உள்ளே சென்று தனது பீச் சோர்ட்ஸைத் தந்தாள். அதை அணிந்தபடி மேலே ஏறினேன்.

அவள் கீழே நின்று நான் ஏறுவதைப் பார்த்தாள். நான் வெட்கத்துடன் ஏறி மேல் மாடியில் இருந்து நன்றி சொன்ன பின்பே அவள் அகன்றாள். அவளைப் பொறுத்தவரை நான் விழுந்தால் உதவ வேண்டும் என்ற நல்லெண்ணம் இருக்கும். ஆனால், எனக்கு வெட்கம் மலைப்பாம்பாக உடலை வளைத்தது. அடுத்த நாள் அவள் தந்த பீச்சோர்ட்ஸை கவனமாக தோய்த்து காயவைத்து ஸ்திரிபோட்டு அவளுக்கு மீண்டும் கொடுத்தேன். அவள் அதனை நிச்சயமாக அணியமாட்டாள். ஆனால், நான் திருப்பிக் கொடுக்காமலிருக்க முடியுமா?

அன்றிலிருந்து இன்றுவரை நான் வீட்டிலும் சாரம் அணிவதில்லை.

(தொடரும்)

நடேசன் <uthayam12@gmail.com>

கவிதை

## அழியாச் சித்திரம்

**ஷங்கர்ராமசுப்ரமணியன்**

நாங்கள் குடியிருந்த வளவில்
எல்லாருக்கும்
முதியவளாகவே
அறிமுகமான அருணாசலத்தாச்சியின்
வீட்டு நடு அறைச் சுவரில்
கஜேந்திர மோட்சம்
காலண்டர் ஓவியத்தைப் பார்த்தேன்
அந்தப் பழுப்புச் சித்திரத்தின் மேல்
வைத்த கண்ணை
இன்னமும் எடுக்கவே இல்லை
அந்தப் படத்தைப் பார்த்தபோது
நான் முதலையாக இல்லை
கஜேந்திரனை சக்கராயுதம் கொண்டு
மேலேயிருந்து காப்பாற்றிய
ஆதிநாராயணனை
நான் சரியாகப் பார்க்கவில்லை
யானையின் தீனக்குரல் கேட்கிறது இன்னமும்
அது மீளும் நிம்மதியும் அந்தச் சித்திரத்தில்
இருக்கிறது
சிறுவனின் கதை
முதலையில் தொடங்கி
யானை வழியாக
ஆதிமூலத்தில்
முடிகிறது
பச்சையாய் நீரோடை
முதலை பற்றியிருக்கும்
யானையின் காலும்
தெரியும் ஸ்படிகத் தன்மை
காலில் ரத்தம் கண்ணில் கண்ணீர் கசிய
தும்பிக்கையை உயர்த்தியபடி
அபயக்குரலிடும்
யானை
சாட்சியாகச் சுற்றிலும் காடு
மலைகள்
தாமரைகள்.

## சதா பிரணவனின்

# வெள்ளிக்கிழமை & வெள்ளிக்கிழமை

டிசே தமிழன்

சாதாரண ஒரு வாழ்வை வாழும் மனிதர்கள் மனம் பிறழ்ந்து போவதற்கு எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. அவ்வாறு சிதையும்போது, அதற்கு முன்பு வாழ்ந்த வாழ்வுக்கு என்ன அர்த்தம் இருக்கின்றது அல்லது பிறழ்ந்தபின் எவ்வாறான அர்த்தம் இருக்கின்றது? மனம் பிறழ்ந்தவர்கள் மட்டுமில்லை சிலவேளைகளில் அவர்களோடு சம்பந்தப்பட்டவர்களின் வாழ்வும்கூட பாதிக்கப் படலாம் என்பதை 'வெள்ளிக்கிழமை மற்றும் வெள்ளிக்கிழமை' (Friday & Friday) திரைப்படம் நமக்குக் காட்சிப்படுத்துகின்றது.

பாரிஸ் நகரில் தமிழ்மக்களுக்கென தனித்துவமாக இருக்கும் லாச்சப்பல் பகுதியில் கதை முழுதும் நிகழ்கின்றது. எழுத்தை முழுநேரமாகக் கொண்ட ஒரு எழுத்தாளன் இன்னமும் நல்லதொரு பிரதியை எழுதமுடியா அவதியுடன் ஒருத்தியைக் காதலித்துக் கொண்டிருக்கின்றான். இறுதியில் அந்த எழுத்தாளன் தான் நேரில் சந்தித்த ஒரு மனிதனின் கதையை எழுதிக் காட்டும்போது, காதலி ஏன் எப்போதும் உன் படைப்புக்கள் இருண்மையாக இருக்கின்றதென முகஞ்சுழிக்கின்றாள். அந்த எழுத்தாளன் எடுக்கின்ற திரைப்படத்தில் அவனும் ஒரு பாத்திரமாக இருந்து நமக்குக் கதை சொல்கின்றான்.

வெள்ளிக்கிழமை என்கின்ற பாத்திரம் எழுத்தாள னின் பார்வையினூடாக எமக்கு விரித்துக் காட்டப் படுகின்றது. தெருக்களில் வீடற்றவராக அலைகின்ற வெள்ளிக்கிழமை ஒரு சிக்கலான மனிதர். அவர் தனது வாழ்வில் ஒரு முக்கிய விடயத்தை மிகச் சம்பிரதாயமாகச் செய்வதற்காகக் கஷ்டப்படும்போது, அப்போது அவர் சந்திக்கின்ற மனிதர்கள் சிலரின் கதைகள் இடைவெட்டாகக் காட்டப்படுகின்றது. புலம்பெயர்ந்த தமிழ்ச் சமூகத்தின் பொதுப்புத்தி மற்றும் தம்மிலிருந்து மாறுபடுபவர்களை விலத்திவைக்கும் பண்பு என்பவற்றோடு பிரெஞ்சுச் சமூகத்தின் இரட்டைத் தன்மைகளும் எள்ளலாக இங்கே காட்டப் படுகின்றன.

பிள்ளையாருக்காக நடத்தப்படுகின்ற திருவிழாவில் நம் தமிழ்ச் சமூகம் பெரியவளவில் கலந்துகொள்கின்றது. ஆனால், அங்கே வெள்ளிக்கிழமை போன்ற விளிம்பு மனிதர்க்கு ஓர் இடமும் இல்லை. அது மட்டுமின்றி செம்பட்டை போன்று தாயகத்தில் மட்டுமின்றி புலம்பெயர்ந்தும் ஒரு நிம்மதியான வாழ்வை வாழமுடியாதவர் பற்றியும் எவரும்




அக்கறைப்படுவதில்லை என்பதையும் செம்பட்டை தப்பி ஓடி ஒளிக்கும் இடத்தில் நடக்கும் விபரீதத்தையும், இப்படத்தில் குறுக்குவெட்டாகப் போகும் காட்சிகளினூடாகப் பார்க்க முடிகின்றது.

ஏற்கனவே குறும்படங்களை எடுத்து தன்னை நிரூபித்துக்காட்டிய சதா பிரணவனின் முதல் முழுநீளத் திரைப்படம் இது. 'தீபன்', 'ரூபா' போன்ற திரைப்படங்களில் நடித்திருந்த ஷோபாசக்தி இதில் வெள்ளிக்கிழமையின் பாத்திரத்தில் நடித்திருக்கின்றார். இந்தப் படத்தின் கதை ஷோபாசக்தி ஏற்கனவே எழுதியிருந்த 'வெள்ளிக்கிழமை' என்ற சிறுகதையை அடிப்படையாகக் கொண்டு மேலும் மெருகுபடுத்தி எடுக்கப்பட்டிருக்கின்றது. சாதாரணமான



காட்சிகளால் மெதுவாகத் தொடங்கும் திரைப்படம் முடிவில் நிகழும் பல்வேறு அசம்பாவிதங்களால் உச்சம் பெறுகின்றது.

அதுவும் ஏற்கனவே இந்தக் கதையை பலமுறை வாசித்த என்னைப் போன்ற ஒருவனைத் திரைப் படமாக்கிக் கவர்வது என்பது அவ்வளவு எளிதல்ல. அது இங்கு சாத்தியமாகியிருப்பது மிக்க மகிழ்ச்சியாக இருந்தது. புலம்பெயர் சூழலில் தொடர்ச்சியாக திரைப்படம் சார்ந்து இயங்கிக்கொண்டிருக்கும் லெனின் ('ரூபா', 'AGun&ARing'), சதா பிரணவன் போன்ற ஒருசிலரிலேயே நான் நம்பிக்கைகொண்டிருக்கின்றேன். அந்த நம்பிக்கை வீணானதல்ல என்று சதாவின் இந்த




முதல் நீளத்திரைப்படம் நிரூபிக்கின்றது.

சதா பிரணவனுக்கென்று சில தனித்துவமான தன்மைகளை அவரின் குறும்படங்களிலிருந்து அவதானித்து வந்திருக்கின்றேன். அதை இத்திரைப் படத்தில் ஒரு தற்கொலைக் காட்சிக்குப் பிறகு, வரும் ஒவ்வொரு பாத்திரங்களுக்கு இருக்கும் பின்னணிக் கதையை மாண்டாஜ்ஜாகக் காட்டும்போது அற்புதமாக வெளிப்பட்டிருக்கின்றது. ஒரு நிமிடத்துக் கும் குறைவாக நீளும் அந்தக் காட்சியே என்னை சட்டென்று நெகிழ்த்திவிடப் போதுமானதாக இருந்தது. ஒருவகையில் நமக்குப் பரிட்சயமான பலரின் தற்கொலைகள், சட்டென்று நினைவுக்கு வரச்செய்து விட்டுப் போகின்ற தத்ரூபமான காட்சி அது.

இன்னொன்று இத்திரைப்படத்தின் மூலமாக, நாம் கடினப்பட்டெல்லாம் கதைகளைத் தேடத்தேவை யில்லை. திரைப்படமாக்கவே நம்மிடையே நிறைய கதைகள் இருக்கின்றன எனச் சொல்லியிருப்பதோடு, எழுதப்பட்ட கதைகளைக்கூட திரையில் வேறுவகையில் காட்சிகளாய் வெளிப்படுத்தமுடியும் என்பதையும் காட்டியிருப்பது கூர்ந்து நோக்கவேண்டியதாகும்.

இலங்கையில் சிங்களப் படங்களுக்கு சிறிய தொகைப் பார்வையாளர்களே இருக்கின்றார்களே என்றாலும், குறிப்பிட்ட சில சிங்கள நெறியாளர்கள் உலக அரங்குகளில் தமது காலடிகளை ஆழமாகப் பதித்து வருகின்றார்கள். அவ்வாறு நாமும் நம்பிக்கை கொள்ளலாம் என்பதற்கான சிறு வெளிச்சத்தை சதா பிரணவனின் 'வெள்ளிக்கிழமை மற்றும் வெள்ளிக்கிழமை' ஒருவகையில் தருகின்றது. ●

"டிசே தமிழன்" <elanko25@gmail.com>

# பின்நகர்ந்த காலம்

**வண்ணநிலவன்**



புதுமைப்பித்தன்

இந்தத் தொடரில், மணிக்கொடி காலம் முதல் 1970 வரையான எழுத்தாளர்கள் பற்றிய சிறு குறிப்பும் ஒரு மீள் பார்வையும் இனி. முதலில்..

## புதுமைப்பித்தன்

புதுமைப்பித்தன் வாழ்ந்த காலத்திலேயே அவருக்கு அங்கீகாரம், அதாவது 'இலக்கியவாதி' என்ற அங்கீகாரம் கிடைத்துவிட்டது. அவர் நாற்பத்தி இரண்டு ஆண்டுகளே வாழ்ந்திருக்கிறார். அவருடைய பூர்வீகம் என்று பார்த்தால் அது திருநெல்வேலிதான். ஆனால், அவர் திருநெல்வேலியில் பிறக்கவில்லை. 1906இல் திருப்பாதிரிப்புலியூரில் புதுமைப்பித்தன் பிறந்திருக்கிறார். அவருடைய அப்பா தாசில்தார் வேலை பார்த்தவர். அதனால், பு.பி.யின் முதல் பத்தாண்டு காலம் செஞ்சி, திண்டிவனம், கள்ளக்குறிச்சி என்று பல ஊர்களில் கழிந்திருக்கிறது.



பிறகு, திருநெல்வேலி வாசம் தொடங்குகிறது. பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் சென்னை, பூனா என்று வெளியூர் வாசம்.

1933இல் அவருடைய முதல் சிறுகதையான 'குலோப்ஜான் காதல்' 'காந்தி' என்ற பத்திரிகையில் வெளியானதாக ஆ.இரா. வேங்கடாசலபதி தொகுத்த 'புதுமைப்பித்தன் கதைகள்' தொகுதி தெரிவிக்கிறது. ஆனால்,இந்தச்சிறுகதை எந்தத்தொகுதி தெரிவிக்கிறது. ஆனால், இந்தச் சிறுகதை எந்தத் தொகுப்பிலும் வெளியானதாகத் தெரியவில்லை. 1934இல் சென்னைக்கு வந்த புதுமைப்பித்தன் 'மணிக்கொடி'யில் பல சிறுகதைகளைத் தொடர்ந்து எழுதி வெளியிடுகிறார். 'ஊழியன்', 'தினமணி', 'தினசரி' முதலான பத்திரிகைகளில் பணிபுரிந்திருக்கிறார். தினமணியில் அதிக காலம், எட்டு வருடங்கள் பணிபுரிந்திருக்கிறார்.

புதுமைப்பித்தனை அவர் வாழ்ந்த காலத்திலேயே பலர் பாராட்டியிருந்தாலும் க.நா.சு.தான் எழுத்து பூர்வமாக அதைப் பதிவு செய்திருக்கிறார். புதுமைப்பித்தனின் சிறுகதைத் தொகுப்புக்கு 1940இல் முன்னுரை எழுதிய ரா.ஸ்ரீ. தேசிகனும் இதைச் செய்திருக்கிறார். ரா.ஸ்ரீ. தேசிகனின் முன்னுரை அபாரமானது. க.நா.சு.வுக்கு அடுத்தபடியாகப் புதுமைப்பித்தனைக் கொண்டாடிய முக்கியமான ஆளுமை சுந்தர ராமசாமி. 1950க்களிலேயே சுந்தர ராமசாமி புதுமைப்பித்தனுக்கு மலர் வெளியிட்டுள்ளார்.

புதுமைப்பித்தனுடன் பழகிய எழுத்தாளர்கள் பலர் இருக்கின்றனர். அதிகப் பழக்கமில்லாவிட்டாலும் மௌனி, பு.பி.யை ஒன்றிரண்டு முறை சந்தித்திருக்கிறார். பி.எஸ். ராமையா, க.நா.சு. போன்றோருடன் கு. அழகிரிசாமி,தொ.மு.சி.ரகுநாதன் போன்றோரும் அடிக்கடி பு.பி.யைச் சந்தித்துப் பழகியிருக்கிறார்கள். வல்லிக்கண்ணனுக்கும் பு.பி.யுடன் அறிமுகமுண்டு. ஆனாலும், அறிமுகம் வெறும் பழக்கமாகப் போய்விடாமல், 'புதுமைப்பித்தன் கதை' என்று நூலாகவே எழுதிக் கூடுதல் அர்த்தம் தேடிக் கொண்டவர் 'தொ.மு.சி.' என்ற தொ.மு. சிதம்பர

ரகுநாதன்.

புதுமைப்பித்தன், மௌனியின் நவீனமான எழுத்து நடையைப் பார்த்து, அவரைத் திருமூலருடன் ஒப்பிட்டுள்ளார். அதுபோல் மௌனியும் புதுமைப்பித்தனைப் பற்றி தனது 'தீபம்' பேட்டியில் 'ஐரானிக் ஆட்டியூட் இயங்க ஒரு பிரமாதமான சாதனையைத்தான் புதுமைப்பித்தன் இலக்கியப் படைப்பில் காட்டியிருக்கிறார்' என்று கூறியிருக்கிறார்.

ஒருவிதமான மணிப்பிரவாள நடை புதுமைப்பித்தன் கதைகளில் ஆங்காங்கே தலையை நீட்டுகிறது. 'சமயக் குரவர்கள் இயற்றும் அற்புதங்கள் என்ற செப்பிடு வித்தைகள் நடவாத இந்தக் காலம்....' என்று சங்குத்தேவன், தர்மத்திலும், 'பொன்னகரத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? நமது பௌராணிகர்களின் கனவைப் போல் அங்கு ஒன்றுமில்லை' என்று பொன்னகரத்திலும் தனது உரைநடையைச் சித்திரிக்கிறார்.

'பிரமநாயகம் பிள்ளையைப் பந்தவினையறுத்த யோகி என்று நினைத்து விடக்கூடாது. அல்லது அவரது மனசுக்கு வேலிபோட்டுப் பாதுகாத்து வளர்த்து போதிமரம் வரையில் கொண்டு விடும் ஞானம் மிகுந்த சுத்தோதனப் பெருந்தகையல்ல அவரது பிதா...' - செல்லம்மாள்.

இந்த வசன நடை அல்லது இந்த உரைநடையில்தான் பு.பி. தனது கதைகளைச் சொல்லிக்கொண்டு போகிறார். இதில், 'வீராசாமி செட்டியார் (விநோதரச மஞ்சரி), அ. மாதவையா (பத்மாவதி சரித்திரம்) ஆகியோரின் வசன நடையின் பாதிப்பு அவரிடம் நிழலாடுவதை உணர முடிகிறது' என்கிறார் சுந்தர ராமசாமி. உரத்த குரலில் ஆசிரியரே குறுக்கிட்டுப் பேசி எழுதிச் செல்லும் இந்த புதுமைப்பித்தனுடைய எழுத்து நடையின் பாதிப்பு அப்படியே ஜெயகாந்தனிடம் இருக்கிறது. சுந்தர ராமசாமியின் ஆரம்பகாலச் சிறுகதைகளிலும் (பிரசாதம் தொகுப்பு) இந்தப் பாதிப்பு உள்ளது. கு.ப.ரா.வின் உரைநடையைப் பின்பற்றி, சன்னமான குரலில் எழுதுகிறவர்கள் - தி.ஜானகிராமன், எம்.வி.வி., அசோகமித்திரன், கு.அழகிரிசாமி - பலருண்டு. ஆனால், பு.பி.யின் உரத்த குரலைப் பின்பற்றி எழுதியவர்கள் ஜெயகாந்தனும் சு.ரா.வும் மட்டுமே. பின்னர் சு.ரா. இந்த நடையை கைவிட்டுவிட்டார். ஆனால், ஜே.கே. தனது நாவல்களில்கூட ஓயாது ஒழியாது உரத்த குரலில் பேசினார்.

'மௌனி சிறுகதைகள்' கட்டுரையில் க.நா.சு., 'புதுமைப்பித்தனுக்கு கருத்தில் இருந்த கவனம் சிறுகதை உருவத்தில் இல்லை' என்று கூறியிருப்பது ஓரளவு உண்மைதான். கு.ப.ரா.வின் உருவப் பிரக்ஞையும், வார்த்தைச் செட்டும் புதுமைப்பித்தனிடம் கிடையாது. வார்த்தைகளை நிறையச் செலவளிப்பவர்தான் புதுமைப்பித்தன். ஆனால், உலக, பிரபஞ்ச, லௌகீக விவகாரங்களைப் போகிறபோக்கில் தீர்க்கதரிசனம் போல் பலஇடங்களில் அனாயாசமாக புதுமைப்பித்தன் கூறி விடுகிறார். இது கு.ப.ரா.விடம் இல்லாதது. ஆனால், ந.பிச்சமூர்த்தியிடம் இந்தத் தத்துவ, உலக விசாரணை உண்டு.

பாரதியாரைப் போல் படைப்பிலக்கியத்தில் ஒரு காலும், பத்திரிகைத் துறையில் ஒரு காலுமாக புதுமைப்பித்தனும் வாழ்ந்து கஷ்டப்பட்டிருக் கிறார். பொருளாதாரத் தேவையை விரட்டி ஓட்டுவதற்காகத் தான், 1946இல் ஜெமினி பட நிறுவனத்தில் ஔவை, காமவல்லி போன்ற திரைப்பட வேலைகளில் ஈடுபட்டார். 'பர்வதகுமாரி புரொடக்ஷன்ஸ்' என்ற பேரில் சினிமா தயாரிப்பில்கூட இறங்க முயற்சி செய்திருக்கிறார். தியாகராஜ பாகவதரின் 'ராஜமுக்தி' படத்திற்கு கதை-வசனம் எழுத பூனாவுக்குச் சென்றார். திருநெல்வேலியில் 'கஷ்டத்தோட கூறு' என்பார்கள்.

ஆனால், இறக்கும் வரைகூட பு.பி. எழுதிக் கொண்டிருந்திருக்கிறார் என்று தெரிகிறது. அவருடைய பிரபலமான சிறுகதையான 'கயிற்றரவு' 1948இல்தான் வெளிவந்துள்ளது. கயிற்றரவில் அவரைத்தான் அவர் எழுதியிருக்கிறார்.

அடுத்து..

## கு.ப. ராஜகோபாலன்

கு.ப.ரா. என்ற 'கும்பகோணம் பட்டாபிராமன் ராஜகோபாலன்', புதுமைப்பித்தன் காலத்தவர். புதுமைப்பித்தனைவிட நான்குவயது மூத்தவர் கு.ப.ரா. ஆனால், புதுமைப்பித்தனின் முதல் சிறுகதையான 'குலாப்ஜான் காதல்' 18.10.1933இலேயே பிரசுரமாகிவிடுகிறது. கு.ப.ராவின் முதல் சிறுகதையாகக் கருதப்படுகிற 'நூருன்னிஸா' 'சுதந்திரச் சங்கு' பத்திரிகையில் 30.3.34இல்தான் பிரசுரமாகிறது.

புதுமைப்பித்தனின் எழுதும் பாணிக்கும் கு.ப.ரா.வின் எழுதும் பாணிக்கும் சிறிதுகூடச் சம்பந்தமில்லை. புதுமைப்பித்தனின் எழுத்தில் வாழ்க்கை, மனிதர்களை குறித்த விமர்சனக் குரலும், கேலியும் குத்தலும் எள்ளலும் மேலோங்கியிருக்கும். கு.ப.ரா.வின் எழுத்து நடை அமைதியானது. அபூர்வமாகச் சில இடங்களில், எப்போதாவது மிக மெல்லிய விமர்சனம் கு.ப.ரா.விடம் எழுந்தாலும், அது எள்ளலோ கேலியோ இல்லாததாகத்தான் இருக்கிறது. புதுமைப்பித்தனின் விமர்சன யதார்த்தவாதத்தின் பிற்கால வாரிசுகளென்று ஜெயகாந்தனையும் சுந்தர ராமசாமியையும் (அவரது ஆரம்பக்கால சிறுகதைகளுக்காக) உறுதியாகச் சொல்லலாம் என்றேன்.

ஆனால், கு.ப.ரா.வின் மென்மையான, அமைதியான கதை சொல்லும் பாணியை தி.ஜானகிராமன், எம்வி.வி., கரிச்சான்குஞ்சு, அசோகமித்திரன் வரை பெரும்பாலான எழுத்தாளர்கள் பின்பற்றி எழுதினர், எழுதிக்கொண்டும் இருக்கின்றனர். கு.ப.ரா.வுக்கு முன்பேகூட பலர் இதுபோல் எழுதியிருக்கலாம். ஆனால், கு.ப.ரா.தான் இந்த இலகுவான விவரிப்பு பாணியில் ஏராளமாகவும் இலக்கியத் தன்மையுடனும் எழுதி இதை ஸ்தாபித்தவர்.

இப்போதைய காலத்தை போலவே அந்த நாட்களிலும் ஆண் - பெண் உறவுகளைச் சித்தரிப்பது, மன ஏக்கங்கள், காதலின் ஆற்றாமைகளை பற்றி எழுதுவது என்பது எழுத்தாளர்களின் இயல்பாகவே இருந்தது. ஆண்-பெண் கவர்ச்சி அல்லது காதல் என்பது அள்ள அள்ள குறையாத அட்சயப் பாத்திரமாகக்



கு.ப. ராஜகோபாலன்

காலங்காலமாக நிலவி வருகிறது. டால்ஸ்டாயின் 'அன்னாகரீனா'வைக் கொண்டாடுகிறது இலக்கிய உலகம். அடிப்படையில் அது ஒரு காதல் கதைதான். தி.ஜானகிராமனின் நாவல்கள் எல்லாவற்றிலுமே அடிநாதமாக ஓடுவது ஆண்-பெண் கவர்ச்சி சம்பந்தப்பட்ட காதல்தான். இதைத்தான் கு.ப.ரா.வும் தனது சிறுகதைகளில் விதவிதமாக எழுதினார்.

'அநேகமாக அவனுடைய எழுத்துக்கு ஆண்-பெண் உறவுதான் அடிப்படையான விஷயமாயிருக்கும். இவ்விஷயத்தைத் தவிர்த்து அவன் கதையோ, கவிதையோ, எழுதவில்லை என்றுகூடச் சொல்லிவிடலாம்' என்கிறார். ந.பிச்சமூர்த்தி. இவர் கு.ப.ரா.வின் பக்கத்து வீட்டுக்காரர், நெருங்கிய நண்பர். இருவரையும் அக்கால இலக்கிய உலகம் 'கும்பகோணம் இரட்டையர்கள்' என்றது.

'காதல் கதை இலக்கியமாகாதா' என்ற கேள்விக்கு விடை கூறுவது கடினம். 'இலக்கியமா இலக்கியமில்லையா என்பது, சொல்லப்படும் முறையில், விவரிக்கப்படும் தொனியில்தான் இருக்கிறது. இது உத்தி, உள்ளடக்கம், சம்பந்தப்பட்ட விஷயமல்ல. ஒரு சிறுகதை, ஒரு நாவல், ஒரு கவிதை, எப்படி கதையை, கருவை விவரிக்கிறது என்பதில்தான் இலக்கியத்தின் வெற்றி இருக்கிறது. இந்த அடிப்படையில் கு.ப.ரா.வை அணுகினால், அவர் ஒரு இலக்கிய கர்த்தாவே என்பது விளங்கும்.

முப்பது, நாற்பதுகளில் தமிழ் இலக்கிய உலகில் செயல்பட்ட புதுமைப்பித்தன், ந.பிச்சமூர்த்தி போன்றவர்கள் புராண, இதிகாசக் கதாபாத்திரங்களை தங்கள் மொழியில் புத்துருவாக்கம் செய்தனர். இதுபோன்ற முயற்சிகளில் கு.ப.ராவும் ஈடுபட்டுள்ளார். 'சபரியின் பிரேமை' என்ற கதையில் சபரி, மதங்க ரிஷியின் மீது பிரேமை கொண்டவராக கு.ப.ரா. வினால் சித்திரிக்கப்படுகிறார். அகலிகையின் கதையை கு.ப.ரா. நாடகமாகவே எழுதியிருக்கிறார்.

கு.ப.ரா.வின் பெரும்பாலான சிறுகதைகள் மூன்று, நான்கு பக்கங்களுக்குள்ளேயே முடிந்துவிடுகின்றன. உணர்ச்சிகளை மட்டுமே சித்திரித்துக்கொண்டு போவதில் கு.ப.ரா. அக்கறை காட்டியதால், புற உலக வர்ணனை என்பது கு.ப.ரா. சிறுகதைகளில் அறவே இல்லை.

கு.ப.ரா. எல்லா இலக்கிய வடிவங்களையும் கையாண்டிருக்கிறார். சிறுகதைகள் அதிக எண்ணிக்கையில் எழுதப்பட்டிருந்தாலும் கவிதை, நாடகம், மொழிபெயர்ப்பு, தழுவல் என்று எல்லாவிதமான எழுத்து முயற்சிகளிலும் கு.ப.ரா. ஈடுபட்டிருக்கிறார். கட்டுரைகளும் நிறையவே எழுதியிருக்கிறார். கு.ப.ரா.வும் ஒரே சமயத்தில், பாரதியைப் போல் எழுத்தாளராகவும் பத்திரிகையாளராகவும் செயல்பட்டிருக்கிறார்.

புத்தர் காலம் முதல் சிவாஜி காலம் வரை நடந்த பல சரித்திர நிகழ்வுகளைத் தனது கற்பனைகளைக் கலந்து ஏராளமான சரித்திரக் கதைகளாகவும் எழுதியிருக்கிறார், கு.ப.ரா. 'சந்திப்பு', 'முதுமைக் கலகம்', 'வேரோட்டம்', 'எதிர்ப்பு' போன்ற நாவல்களை எழுதும் முயற்சிகளையும் கு.ப.ரா. தொடர்ந்திருக்கிறார்.

க.நா.சு. என்ற க.நா. சுப்பிரமணியம், தனது 'இலக்கிய விசாரம்' என்ற நூலில், 'எழுத்தாளன் சோதனை முயற்சிகளில் ஈடுபட வேண்டும்' என்று கூறியிருக்கிறார். க.நா.சு. மேல்நாட்டு ஆசிரியர்களைப் பார்த்து இதைக் கூறினாரா அல்லது பல்வேறு சோதனை முயற்சிகளிலும் ஈடுபட்ட பாரதி, புதுமைப்பித்தன், கு.ப.ரா. போன்றவர்களின் எழுத்துலகச் செயல்பாட்டை வைத்து அப்படிக் கூறினாரா என்று தெரியவில்லை.

புத்தக வியாபாரத்தையும் கு.ப.ரா. விட்டு வைக்கவில்லை. *1940*இல் கும்பகோணத்தில், மறுமலர்ச்சி புத்தக நிலையம் என்ற பெயரில், ஒரு புத்தகக்கடையையும் கு.ப.ரா. நடத்தி பார்த்திருக்கிறார். நாற்பத்து இரண்டு ஆண்டுகளே வாழ்ந்த கு.ப.ரா *27.4.44*இல் கும்பகோணத்திலேயே இறந்தார். குறுகிய காலத்தில் நிறையச் சாதனைகளை நிகழ்த்திவிட்டுச் சென்றுள்ளார் கு.ப.ரா.

(தொடரும்)

**வண்ணநிலவன்**

**<ramachandran.u49@gmail.com>**

# அம்பா வேலை தேடுகிறாள்

**பொ. கருணாகரமூர்த்தி** **ஓவியம்: Hans Grundig**

இவ்வாண்டுதான் பல்கலையுள் 'உளவியல்' படிக்கப் புகுந்திருக்கும் என் மகள் அம்பாவுக்கு இப்போது ஈஸ்டருடன் தொடரும் நீண்ட கோடை விடுமுறை ஆரம்பித்திருக்கிறது.

"இவ்விடுமுறை நாட்களில் நான் வேலை செய்யப் போகிறேன் டாட்" என்றாள்.

"சரி உன் இஷ்டம்" என்றேன்.

பொருத்தமான வேலைகளை இணையத்தில் தேடியதில் ஓரிடத்தில் 'ஆபீஸ் அசிஸ்டென்ட்' என்றொரு பணி வாய்ப்புக்கிடைத்தது. ' முதநாளே வேலை ஆரம்பித்துவிடலாம், அத்தனை எளிமையான வேலை' என்றார்களாம். அடுத்த நாள் உற்சாகமாக கூவிக்கொண்டு அங்கே போனாள்.

அது ஒரு காப்புறுதிக் குழுமம். புதிய பயனர்களை தொலைபேசியில் அழைத்து, நட்பாகப் பேசி, அக் குழுமத்தின் பலவேறு வகையான காப்புறுதித் திட்டங்களை கவர்ச்சியாக எடுத்துச்சொல்லி, அவர்களைக் குழுமத்தின் ஏதாவது ஒரு திட்டத்தில் நைச்சியமாக இணைத்துக்கொண்டுவிட வேண்டியது இவளுக்கான பணி.

இவளுக்கு அதற்கான பேச்சுப் பயிற்சியை அன்றே வழங்கிவிட்டு, அப்படி, ஒருநாளில் எத்தனை பேரை இணைத்துக்கொள்கிறாயோ அதற்கேற்ப 'போனஸ்' உண்டு என்று சொல்லியிருக்கிறார்கள்.

ஜெர்மனியில் ஒருவரை தொலைபேசி மூலம் ஒரு ஒப்பந்தத்துள் இழுத்துக்கொண்டுவிட்டால்கூட, அது அவர்களுடன் எழுத்து மூலம் ஒப்பந்தம் செய்துகொண்டமாதிரித்தான். மறுசீராய்வுசெய்யவோ திரும்பப் பெறவோ முடியாது.



சிலமணிநேரப் பயிற்சி முடிந்தவுடன் அவளிடம் 200 வரையிலான தொலைபேசி இலக்கங்களைக் கொடுத்து அவர்களை ஒவ்வொருவராக அழைத்துப் பேசச் சொன்னார்கள்.

இவளும் முதலாவது அழைப்பை ஏற்படுத்தினாள், மறு துறையில் ஒலிவாங்கி எடுக்கப்பட்டதும் குரலில் தேன்தடவிப் பேசினாள்.

"இனிய காலை வணக்கம். இது 'அம்பா'. Good Fortune காப்புறுதிக் குழுமத்திலிருந்து பேசுகிறேன் மெடம்."

"சரி.... வணக்கம்."

"திரு. Hoffmann.... அவர்களுடன் பேசலாமா?"

"அவன் போனவாரம் செத்துப்போனான்.... செத்த பிறகாவது அவனை நிம்மதியாய் இருக்கவிடுங்கடி வேசைக்குமரிகளா.... டொக்."

அக்கைம்பெண் தன் முரட்டுக் குரலால் இவளின் செவிப்பறைகள் கிழிய வாழ்த்திவிட்டு தொலை வாங்கியை அதிர வைத்தாளாம்.

முதல் நாளன்று முதல் பணியிலேயே, 'வாழ்த்தும் சுபமங்களமும்' ஒரு சேரக்கிடைத்ததில் தளர்ந்துபோய் இரண்டு நாட்கள் வீட்டிலேயே இருந்தாள்,

அம்பா உளவியல் அடிப்படைகள் தெரிந்தவள், நான் தேறுதல் சொல்ல வேண்டியதில்லை. அவளாக எழுந்துகொண்டு மீண்டும் உற்சாகமாய் வேலை தேடினாள்.

இணையத்தில் அவந்திகா Brian எனும் பெண், தன் அரை இந்தியக் குழந்தைகளைப் பராமரிக்க ஒரு செவிலித்தாய் தேவை என்று விளம்பரம் கொடுத்திருந்தாள். இந்தியப் பெண் என்றதிலும், ஒரே சுரங்கத் தொடரியில் செல்லக்கூடிய வகையில் நாலைந்து தரிப்புகள் தொலைவிலேயே அவர்களின் வீடு இருந்ததாலும், மனநிறைவுடன், அவளுக்குத் தொலைபேசினாள். அம்பாவுக்கு நேர்முகத்துக்கு ஒரு சனியன்று நேரம் குறிக்கப்பட்டது. அவந்திகாவுக்கும் இவள் ஆசியப் பெண் என்பதில் மனத்திருப்தி இருந்திருக்கும். அச் சனிக்கிழமையன்று மாலைநேரம் நேர்முகத்துக்காக அவளிடம் சென்றவள் அதே வேகத்தில் திரும்பிவந்தாள்.

நானும் "என்னம்மா போன காரியம் என்னாச்சு...." என்றேன் பதட்டத்துடன்.

தோட்பையை வீசிவிட்டுப் 'பொத்'தென்று மென்னிருக்கையில் சப்தமெழ இருந்தாள்.

"அவள் இந்தியாவில் பிறந்திருக்கிறாள்.... ஆனால், நடத்தையில் இந்தியன் இல்லை" என்றாள், என்னத்தைக் கன்னையா பாணியில்.

நான் புரியாமல் விழிக்கவும்.... . "Es ist eine (That's a) bitchy problematic familie Dad."

"அப்பிடி என்னதான் ப்ரொப்ளம்....."

"நான் அங்க வேலைக்குப் போகல்ல, அந்தப் பிரச்சனையும் உங்களுக்கு வேண்டாம், விட்டு விடுங்கள் It's Nasty, Silly and Ridiculous" என்றாள்.

சற்று நேரங்கழித்துத் தானாவே, "அது அவளோட Ethics and Principlesக்கு ஓகேயா இருக்கலாம்.... எனக்கு ஓகே இல்லை.... என்னால அவள் குழந்தைகளைப் பார்க்கமுடியாது" என்றபடி தன் அறைக்கு உடைகள் மாற்ற எழுந்து போனாள்.

Philosophy படிக்கிறவள், பன்னிரண்டு வயதிலேயே, "கடவுள் உனக்கு ஒரு எலுமிச்சங் காயைத்தான்



தருவார். அதைக் கறிக்குப் பிழிகிறாயா, இல்லை உன் எதிரியின் கண்ணுக்குள் பிழிகிறாயா என்பது உன் சாமர்த்தியம்" என்றெல்லாம் தத்துவம்ஸ் பகர்ந்தவள், ஒன்றை நிராகரிக்கிறாள் என்றால், அதற்கு நியாயமான காரணமில்லாமல் போகாது. அப்பாவென்றாலும் இப்போதைய பிள்ளைகளிடம் ஓரளவுக்குமேல் எதையும் துருவேலாது. சரி பிறகொருநாள் கேட்போம் என்று அவ்விடயத்தில் ஆர்வமில்லாத மாதிரி இருந்துவிட்டேன்.

ஆனால், தூங்கப்போகுமுன் இரவே தாயிடம் நடந்ததைப் பூராகவும் சொல்லியிருக்கிறாள். இரவு அவள்தான் விஷயத்தை எனக்குக் காதுடன் சொன்னாள்.

அதின் முன் நிகழ்வு இதுதான்.

முயலும் ரெடிக்கரடியும்போல, பெண்ணும் ஆணுமாய் இரண்டு குழந்தைகள். Lilly 4 வயது, Moritz 2 வயது. இருவருக்கும் தாயைப்போலவே கறுத்தக் கேசமும் கறுப்பு விழிகளுமாம். முதற்பார்வையிலேயே குழந்தைகள் ஆசையாசையாய் ஏதோ முன்னமே பரிச்சயமானவர்களைப்போல் இவளிடம் தாவிவந்து ஒட்டிக்கொள்ள இவளுக்கும் அவர்கள்மேல் இனம் புரியாத ஈர்ப்பு வந்துவிட்டது.

அவந்திகா இவளுக்கு நல்லதொரு மணங்கமழும் கோப்பியை வழங்கிவிட்டு சம்பாஷணையைத் தொடங்கியிருக்கிறாள்:

"நீங்கள் இந்தியாவில எந்தப் பக்கம்?"

"இந்தியா இல்லை அதுக்குக் கிட்டவுள்ள ஒரு தீவு, அஞ்சல்ல குறிப்பிட்டிருந்தேனே."

"மொறீஷியஸ்...."

"எதுக்குங்க அவ்வளோ தூரம்.... ஜஸ்ட் ஒரு 30 கி.மீட்டர் தொலைவிலுள்ள ஒரு குட்டித்தீவு."

"ஓ.... ஸ்ரீலங்காவா? தமிழா அல்லது அந்த மற்றப் பாஷையா...."

"நான் தமிழ்.... அங்குள்ள மற்றப் பாஷையை சிங்களம் என்போம்."

அவந்திகாவும் தன் கணவன் பணிபுரியும் குழுமத்தின் பெயர், தான் ஒரு பல்பொருள் அங்காடியில் 'அளியில்' (Counter) பணிபுரிவதுபோன்ற பொதுவான விஷயங்களைப் பேசிவிட்டு, "இன்னும் 3 மாதத்தில் Lillyஇக்கு முன்பள்ளி கிடைத்துவிடும். Moritzக்கு மேலும் ஓராண்டுக்கு பராமரிப்பு தேவைப்படும்" என்றாளாம்.

இன்னும் குழந்தைகள் இருவரினதும் பழக்க வழக்கங்கள், விருப்புவெறுப்புகள், குணங்கள், மனோ பாவங்கள் பற்றியெல்லாம் சொன்னவள் அத்துடன் நிறுத்தித் தொலைத்திருக்கலாம்.

"இந்த இரண்டு நத்தைகளுக்கும் நான்தான் அம்மா, ஆனால் அப்பாதான் வேறுவேறு" என்றாளாம்.

இவள் அவ்விஷயத்தில் அவ்வளவு ஆர்வம் காட்டாமலிருக்க அவள் மேலும் சலம்பியிருக்கிறாள்.

"Lillyஇன் அப்பாவல்ல.... Brian அப்பாதான் Moritzக்கும் அப்பா."

தலை கிறுகிறுத்திருந்தவள் பேசமுடிந்தபோது அவளைக் கேட்டிருக்கிறாள்: "ஏன்.... மாமன் உன்னை 'றேப்' பண்ணிட்டானா?"

"No.... Non.... No..... He is a gem of men you know?"

"அப்போ எப்படி 'இது' ஆச்சு?"

"நாங்கள் ஒரே வீட்டிலிருக்கிறோமா, அவன் அடிக்கடி 'டூர்' போயிடுவான், தனிமை, அப்படி யாயிடிச்சு."

"இப்போதும் ஒரே வீட்டிலேயா....?"

தலையை மேலும் கீழும் ஆட்டினாளாம்.

"சொறி....மாம்,என்னைப்பொறுத்தாற்றவேண்டும், என்னால் உங்கள் குழந்தைகளைப் பார்த்துக்க முடியாது, உங்கள் கோப்பிக்கு நன்றி."

"Hey.... what happened dear, what's wrong with you Miss....?"

"Sorry.... Mam, I have no words to say you" என்றுவிட்டு எழுந்து வந்துவிட்டாள் கோபக்காரி.

சகியும் எனக்கு அதைச் சொல்லாமல் விட்டிருக்கலாம்.

என் தலைக்குள் இயக்குனர் சாமியின் 'சிந்து சமவெளி' சினிமாவின் காட்சிகள் சலனிக்கத் தொடங்கின.

அம்பா தொடர்ந்தும் வேலை தேடுகிறாள். ●

**"பொ. கருணாகரமூர்த்தி"** <karunah08@gmail.com>

# டி. கண்ணன் கவிதைகள்

1.
திணறித் தொடங்கியது மழை
பின் கோணல் சாரல்
நேர்கோட்டில் பரவலாய் மழைத்தூறல்
நிழல்கள் மறைந்தன (கூடவே அணில்களும்)
ஓங்கித் தொடங்கியது கன மழை
முதலில் மிதந்தன மொட்டை வாழைத்தார்கள்
தெரு ஜலதாரைகளில் மழை ஓதம்
மேலும் கார் கொண்டது வானம்
இன்னும் இன்னும் என்று
அலறுகிறது மனம்

2.
ஓர் கதை
பல கிரகங்களிருந்தும்
இயந்திரங்கள் வந்திறங்குகின்றன
நிலவில்
மேகமற்ற வானில் தத்தித்தத்தி
நகர்கிறது நிலா
உண்ண அடம்பிடிக்கின்றன
குழந்தைகள்
நீள்கிறது கதை



3.
நீ காண விரும்பாத
உன் மதியத்தை
வேறொருவன்
கண்டு களித்துக் கொண்டிருக்கிறான்
நீ
துய்க்க விரும்பிய அந்தி
வேறொருவன் வசம்
நீ அணைக்க விரும்பிய
அணங்கை
வேறொருவன் அணைத்துக் கொண்டிருக்கிறான்
மூவரும் ஒருவரல்ல
என ஆறுதல்
பொதுவாய் ஓடிக் கொண்டிருக்கிறது ஆறு ●

"டி. கண்ணன்" <krishnaswamy164@gmail.com>



# அம்ருதா அட்சரா பதிப்பக

## வெளியீடுகள் கிடைக்குமிடம்

| | | |
|---|---|---|
| **நியூ புக் லேண்ட்ஸ்**<br>வடக்கு உஸ்மான் ரோடு,<br>தி. நகர், சென்னை-600 017.<br>தொலைபேசி : 044 - 2815 6006 | **ரம்யா புக் வேல்ட்**<br>எண். 160, தலைமைத் தபால்<br>அலுவலகம், விழுப்புரம்.<br>கைபேசி : 94431 78915 | **A.K. சந்திரய்யன் & சன்ஸ்**<br>எண். 252/161B, செரி ரோடு,<br>சேலம்.<br>தொலைபேசி : 0427 2410096 |
| **திருமால் புக் ஷாப்**<br>எண்.17/A, பெங்களூர் சாலை,<br>கிருஷ்ணகிரி.<br>கைபேசி : 94436 31941 | **விஜயா பதிப்பகம்**<br>எண். 20, ராஜா தெரு,<br>கோவை - 641 001.<br>கைபேசி : 94438 50000<br>தொலைபேசி : 2394614 | **புக்ஸ் & புக்ஸ்**<br>எண். 29, நியூ ஸ்கீம் சாலை,<br>பொள்ளாச்சி - 624 001.<br>கைபேசி : 98650 05084. |
| **அருணை புக் சென்டர்**<br>திருவூடல் தெரு,<br>திருவண்ணாமலை - 606 601.<br>கைபேசி : 92453 32365 | **நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**<br>எண்.79-80, மேற்கு கோபுர வீதி,<br>மதுரை - 625 001.<br>தொலைபேசி : 0452-2344106 | **சர்வோதயா<br>இலக்கியப் பண்ணை**<br>எண்.32/1, மேற்கு வெளி வீதி,<br>மதுரை-1.<br>கைபேசி : 98946 42007 |
| **குமுதம் புக் சென்டர்**<br>எண். 29, VOC பஸ் நிலையம்,<br>பழனி.<br>கைபேசி : 98428 43479 | **மகேஸ்வரி புத்தக நிலையம்**<br>எண். 29, கார்ப்பரேஷன் காம்ப்ளக்ஸ்,<br>ஜீவாபாய் மேல் நிலைப்பள்ளி அருகில்,<br>ரயில்வே ஸ்டேஷன் சாலை, திருப்பூர்.<br>கைபேசி : 94420 04254 | **பாண்டியன் புத்த அகம்**<br>எண். 793, வடக்கு மெயின் தெரு,<br>பிருந்தாவனம் கிழக்கு,<br>புதுக்கோட்டை - 622 001<br>கைபேசி : 99766 93072 |
| **பாவேந்தர் புக் ஸ்டால்**<br>எண். 1, கனகசபை நகர்,<br>நகராட்சி காலனி,<br>மருத்துவக் கல்லூரிச் சாலை,<br>தஞ்சாவூர்.<br>கைபேசி : 93600 18384 | **மார்க்கண்டேயன்<br>புக் காலரி**<br>கும்பேஸ்வரர் சன்னதி,<br>கும்பகோணம் - 612 001.<br>கைபேசி : 96298 15580 | **இளங்கோ புக் சென்டர்**<br>எண். 51/5, நாராயணப் பிள்ளை தெரு,<br>மயிலாடுதுறை.<br>தொலைபேசி : 04364-226188 |
| **அறிவு புத்தக நிலையம்**<br>தெற்குத் தெரு, திருவாரூர்.<br>கைபேசி : 94431 25561 | **பாலா தினகரன்<br>நியூஸ் ஏஜென்சி**<br>காரைக்கால்.<br>கைபேசி : 94431 20637 | **நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**<br>எண். 4, பெரியார் பழைய<br>பஸ் நிலையம், திருநெல்வேலி.<br>கைபேசி : 98946 66890 |
| **ஈகிள் புக் சென்டர்**<br>எண். 1A/25, சிதம்பரம் மெயின் ரோடு,<br>பாளையங்கோட்டை ரோடு, தூத்துக்குடி.<br>கைபேசி : 94436 33333 | **சித்ரா தேவி<br>கல்லூரி புக் சென்டர்**<br>எண். 280, மெயின் ரோடு,<br>கோவில்பட்டி - 628 501.<br>கைபேசி : 98943 25574 | **சுதர்சன் புக்ஸ்**<br>எண். 4, பெல் ஸ்டேஜ் டவுன்,<br>S.P. அலுவலகம் சாலை,<br>நாகர்கோவில் - 629 001.<br>தொலைபேசி : 04652-228445 |

**தொடர்புக்கு : 044-2435 3555 / 94440 70000**

**அம்ருதா** இதழ் தங்கள் பகுதியில் எங்கு கிடைக்கவில்லை என்பதை
தகவல் தெரிவித்து உதவுங்கள் : **96005 79149 / 97510 51526**



# அம்ருதா

## வெளியீடுகள்




ரூ. 80/-




ரூ. 170/-




ரூ. 100/-




ரூ. 170/-


**அம்ருதா பதிப்பகம்**

12 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 2ஆவது குறுக்குத் தெரு, சிஐடி நகர் , 3ஆவது பிரதான சாலை
நந்தனம், சென்னை - 600035. தொலைபேசி: 94440 7000,
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையதளம்: www.amruthamagazine.com